அதிகாரிகள் குடுமி உங்கள் கையில்





# கிராம சபை வழிகாட்டி

நன்கொடை ரூ.50/-


டாக்டர்.**நல்வினை.விஸ்வராஜ்**, எம்.ஏ.பி.எல்.,

**க. சதீஸ்குமார்**, பி.ஏ.பி.எல்.,

**கு. பாஸ்கர்**, பி.ஏ.எல்.எல்.பி.,



வெளியீடு

சாமானியனுக்கான நீதி

**பத்து ரூபாய் இயக்கம்**

தகவல் உரிமை சட்ட ஆர்வலர்கள் அமைப்பு

89400 06645, 94456 75801

# கிராம சபை வழிகாட்டி

(அதிகாரிகள் குடுமி உங்கள் கையில்)

வெளியீடு:-

பத்து ரூபாய் இயக்கம்

(தகவல் - உரிமை - சட்ட ஆர்வாளர்கள் அமைப்பு)

தலைமை அலுவலகம்

எண் 7 பழைய பேருந்து நிலையம்

இராசிபுரம்- 637408.



**பொறுப்பு துறப்பு :** இந்த புத்தகம் முழுமையாக கவணமாக எவ்வித குறைபாடுமின்றி முழு அர்பணிப்புடன் தயாரிக்கப் பட்டுள்ளது. ஏதேனும் தவறுகள் குற்றம் குறைகள் இருப்பின் ஆசிரியர் வெளியீட்டாளர் அச்சகர் பொறுப்பாக மாட்டார்கள்.

# கிராம சபை கூட்டம் நடத்த கடைபிடிக்க வேண்டிய நடைமுறை வழிமுறைகள்

1. கிராம சபைக் கூட்டத்தில் விவாதிக்கப்பட வேண்டிய பொருள் குறித்து முடிவு செய்ய கிராம ஊராட்சிகள் கடை பிடிக்க வேண்டிய வழிமுறைகள்

2. கிராம சபைக் கூட்டம் நடத்துவதற்கான நெறிமுறைகள்

3. கிராம சபை நடத்தும் முறை
   - செய்ய வேண்டியவை
   - செய்யக் கூடாதவை

4. பற்றாளர்களுக்கான (Nodal Officer) கடைபிடிக்க வேண்டிய நெறிமுறைகள்

5. கிராம சபைக் கூட்டம் நடத்த மாவட்ட ஆட்சித் தலைலவர்கள் கடைபிடிக்க வேண்டிய நெறிமுறைகள்.

6. பற்றாளர்களுக்கான (Nodal Officer) ஆய்வுக் குறிப்பு (Check List)

## கிராம சபைக் கூட்டத்தில் விவாதிக்கப்பட வேண்டிய பொருள் குறித்து முடிவு செய்ய கிராம ஊராட்சிகள் கடைபிடிக்க வேண்டிய நடைமுறை வழிமுறைகள்.

**தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் பிரிவு 3(2)-ன்படி ஒவ்வொரு ஊராட்சியும் ஆறு மாதத்திற்கு குறையாத கால இடைவெளியில் கிராம சபைக் கூட்டத்தை சட்டப்படி கூட்ட வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டுள்ளது.**

- அவ்வாறு கூட்டத் தவறினால் மாவட்ட ஆட்சித் தலைவர், கிராம சபைக் கூட்டுவதற்கும் பிரிவு 205-ன்படி ஊராட்சித் தலைவர் மீது நடவடிக்கை எடுத்து பதவி நீக்கம் செய்வதற்கும் வழி வகை உள்ளது.

- ஒவ்வொரு ஊராட்சியும் கிராம சபை கூட்டம் கூட்டுவதற்கு ஒரு வாரத்திற்கு முன்பு கிராமசபையில் விவாதப் பொருள்களை முடிவு செய்ய, கிராம ஊராட்சிக் கூட்டத்தைக் கூட்ட வேண்டும். இதற்கென சிறப்புக் கிராம ஊராட்சி கூட்டத்தைக் கூட்டலாம்.

- விவாதிக்கப்படவேண்டிய பல்வேறு பொருள்கள் குறித்து இந்தக் கூட்டத்தில் முடிவு செய்யலாம். குறிப்பாக கீழ்கண்ட பொருள்கள் நடத்தப்படும் கூட்டத்தில் கண்டிப்பாக இடம் பெறுவது அவசியம்.

1. சென்ற கிராம கிராம சபைக் கூட்டத்தில் அனுமதிக்கப்பட்ட தீர்மானங்கள் மற்றும் அவற்றின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள்.

2. சென்ற ஆண்டில் உள்ளாட்சி அமைப்புகள் மற்றும் பிற துறைகள் மூலம் நிறைவேற்றப்பட்ட திட்ட பணிகள் பற்றி விவாதித்தல்.

3. சென்ற ஆண்டில் தனி நபர்கள் பயன்பெறும் அரசு திட்டங்களில் மூலம் பயன்பெற்ற பல்வேறு பயனாளிகள் பற்றி விவரம் தெரிவித்தல்.
4. சென்ற ஆண்டுக்கான கணக்குகளை சமூக தணிக்கைக்கு வைத்தல்.
5. சென்ற ஆண்டுக்கான தணிக்கைத் தடைகள் மற்றும் அவற்றிற்கு கிராம ஊராட்சி அளித்துள்ள பதில் பற்றிய விவரங்கள்.

6. நடப்பு ஆண்டில் தனிநபர் பயன்பெறும் திட்டங்களில் முன்னுரிமை அளிக்கப்பட குடும்பங்கள் விவரம், குறிப்பாக தொகுப்பு வீடுகள், வறுமை ஒழிப்புத் திட்டத்தில் கடனுதவி அளிக்க, விவாதித்து முடிவு செய்தல்.

7. ஊரக வளர்ச்சித் துறை மூலம் நிறைவேற்றப்படும் தனிநபர் பயன் பெறும் திட்டங்களான வறுமை ஒழிப்புத் திட்டம், தொகுப்பு வீடுகள் ஆகியவற்றில் தகுதியான பயனாளிகள் தேர்வு செய்யப்பட்டு கிராம சபை மூலமே அனுமதிக்கப்பட வேண்டும்.

8. கிராம வளர்ச்சித் திட்டம் கிராம சபையில் விவாதிக்கப்பட்டு கிராம சபையின் அனுமதி பெறப்பட வேண்டும்.

9. ஒவ்வொரு கிராம ஊராட்சியிலும் தேவையான அடிப்படை வசதிகள் சமூக பணிகள் குறித்த பொது மக்ககளின் கோரிக்கைகள் கிராம சபையில் தொகுக்கப்பட்டு இவை மக்களின் அவசியத் தேவைகள் அடிப்படையில் முன்னுரிமைபடுத்தப்பட்டு, பல்வேறு திட்டங்களில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய திட்டப் பணிகள் குறித்த பட்டியலை கிராம சபை மூலம் அனுமதிக்கப்பட வேண்டும்.

10. ஒவ்வொரு கிராமத்திலும் நமக்கு நாமே திட்டத்தில் எடுத்து செய்யப்பட வேண்டிய பணிகள் பற்றியும், மக்களின் பங்களிப்பு பற்றியும் விவாதித்து கிராம சபை மூலம் முடிவு செய்ய வேண்டும்.

- இதுபோன்ற பிரச்சனைகள் மற்றும் கிராமத்தில் குறிப்பாக உள்ள வேறு பிரச்சனைகளை விவாதிக்க உரிய விபரங்களை தொகுத்து கிராம தொகுத்து கிராம ஊராட்சியின் அனுமதி பெறவேண்டும். இப்பொருள் சம்பந்தமான விவரங்களை பற்றாளர்களுக்கான (Nodal Officer) மூலம் சம்பந்தப்பட்ட துறைகளிடமிருந்து சேகரிக்கவேண்டும்.

- கிராம சபை கூட்டம் நடத்த விளம்பரம் செய்ய வேண்டிய உத்திகள். உதாரணமாக துண்டு பிரசுரம் தயாரித்தல், வார்டு உறுப்பினர்கள் நேரிடையாக மக்களை அழைத்தல், ஒலி பெருக்கி மூலம் விளம்பரம் செய்தல் போன்றவை பற்றி கிராம ஊராட்சி கூட்டத்தில் முடிவு செய்ய வேண்டும்.

- சமூகத் தணிக்கைக்கு பதிவேடுகள் மற்றும் ஆவணங்களை யார்பொறுப்பில் எங்கு வைக்க வேண்டும் என்று முன்னரே முடிவு செய்ய வேண்டும். கூட்டம் நடைபெறும் இடம் முன்கூட்டியே முடிவு செய்ய வேண்டும். இந்த இடம் பொது மக்களுக்கு வசதியான பொது இடமாக இருக்க வேண்டும்.

- சென்ற ஆண்டு திட்டப்பணிகள் ஊரக வளர்ச்சித் துறை, பொதுப்பணித் துறை, நெடுஞ்சாலை துறை போன்ற துறைகள் மூலம் செயல்படுத்தப்பட்ட திட்டப்பணிகள் குறித்து ஆய்வு

செய்ய இது குறித்து மாவட்ட ஆட்சித் தலைவர் சம்பந்தப்பட்ட துறையிலிருந்து விபரங்கள் பெற்று பற்றாளர் மூலம் ஊராட்சிக்கு வழங்குவதை தொகுக்க வேண்டும்.

- அதே போல் ஊரக வளர்ச்சி துறை, வேளாண்மை துறை, தோட்டக் கலை துறை, கால்நடை துறை, ஆதிதிராவிடர் நல துறை, வருவாய் துறை, சமுக நல துறை போன்ற துறைகள் மூலமாக தனி நபர்களுக்கு வழங்கப்படும் மான்யம் மற்றும் கடன், பிற திட்டங்களில் உதவிகள் பற்றி பயன்பெற்ற தனி நபர் பட்டியல், நிதி பயன்பாடு இவற்றை கிராம வாரியாக சம்பந்தப்பட்ட துறைகளிலிருந்து பெற வேண்டும்.

- நடப்பு ஆண்டு நடத்தப்பட வேண்டிய மருத்துவ முகாம், மற்றும் இது போன்ற தீவிர பிரச்சாரம் செய்ய வேண்டிய பொருள் பற்றியும் விவாதத்திற்கு வைக்கலாம்.

## கிராம சபை நடத்துவதற்கான நெறிமுறைகள்

- கிராம சபை அரசியல் அமைப்பு சட்டபடியான ஒரு அமைப்பு. இதன் முக்கியத்துவம் மற்றும் பொறுப்பை உணர்ந்து அந்தக் கூட்டத்தில் இந்த அமைப்பின் கண்ணியம் காப்பாற்றப்பட வேண்டும். இது அரசு விழாவோ அரசியல் மேடையோ அல்லது கூட்ட மேடையோ இல்லை என்பதை சம்பந்தப்பட்ட அனைவரும் உணர வேண்டும்.

- கிராம சபைக் கூட்டம் நடத்த முடிவு முடிவு செய்த தேதிக்கு ஒருவாரம் முன்னதாக விதிமுறைப்படி அறிவிப்பு செய்யவேண்டும். துண்டு பிரசுரம், ஒலிபெருக்கிமூலம் விளம்பரம் செய்ய வேண்டும். வார்டு உறுப்பினர்கள் நேரில் சென்று பொது மக்களை அழைக்க வேண்டும்

- கிராம சபை நடத்த தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் பொது இடமாகவும் திறந்த வெளியாகவும் இருக்க வேண்டும். விழா மேடைகள் அமைத்தல், தேவையற்ற ஆடம்பரம் முதலியவை தவிர்க்கப்பட வேண்டும். அறைகளுக்குள் கூட்டம் நடத்தப் படுவது தவிர்க்கப்பட வேண்டும்.

- கூட்டப் பொருள் சம்பந்தமாக கிராம சபை கூட்டத்தில் துண்டு பிரசுரம் மீண்டும் கொடுக்க வேண்டும். இதனால் கிராம சபையில் மக்கள் விவாதிக்கப்படும் பொருள் குறித்து விபரங்கள் தெரிந்துகொள்ள வாய்ப்பாக அமையும்.

- கிராம சபை கூட்டத்திற்கு தலைவர் தலைமை ஏற்க வேண்டும். அவர் இல்லாமல் போனால் துணைத் தலைவர் தலைமை ஏற்க வேண்டும். வேறு முக்கிய பிரமுகர்களோ சட்டமன்ற உறுப்பினரோ கிராமசபையின் தலைமை பொறுப்பை ஏற்பது சட்டப்படி தவறு.

- முதலில் தலைவர் கிராம சபை உறுப்பினர்களை வரவேற்கவேண்டும். அதன்பிறகு விவாதிக்கப்பட வேண்டிய பொருள்களை சுருக்கமாக கோடிட்டு காட்ட வேண்டும். பிறகு ஒவ்வொரு விவாதப்பொருளையும் தலைவர் எடுத்துரைக்க விவாதம் தொடங்கும். கிராம மக்களுக்கு வேறுபாடின்றி விவாதத்தில் கலந்துகொள்ள அனுமதி அளிக்க வேண்டும்.

- ஒவ்வொரு பொருள் மீதான விவாதத்தின் இறுதியில் பொது மக்கள் கூறும் கருத்தின் அடிப்படையில் தீர்மானத்தை எழுதி, கிராம சபை அனுமதி பெற்று குறிப்பு புத்தகத்தில் எழுதவேண்டும். இதற்கு பற்றாளர் (Nodal Officer) உதவியாக இருக்க வேண்டும்.

- விவாதப் பொருட்களை பற்றியோ வரவு செலவு திட்டம் பற்றியோ பற்றாளர்கள் (Nodal Officer) வாசிப்பதோ கருத்துக்கூறவோ கூடாது. அதே போல் கிராம சபைக் கூட்டத்தை பிரசங்க மேடையாகவோ, விவாத மேடையாகவோ பயன்படுத்தக்கூடாது.

- தலைவர் மீது குற்றச்சாட்டு கூறப்பட்டால், தலைவர், பொறுமையாக பதில் அளிக்க வேண்டும். தேவைப்பட்டால் ஆவணங்களை காண்பிக்கவேண்டும். இதற்கு மாறாக நடந்துகொள்ளும் தலைவர்கள், ஊறுப்பினர்கள் பற்றி பற்றாளர்கள் (Nodal Officer) அறிக்கையில் குறிப்பிட வேண்டும்.

- ஊராட்சிக் தலைவர் மீதோ, உறுப்பினர் மீதோ, அலுவலர்கள் மீதோ கிராம உறுப்பினர்கள் குறைகளை சபை சுட்டிக்காட்டுவதற்கு உரிமை உண்டு. அதேபோல் பதில் அளிப்பதும் தலைவரின் கடமையாகும்.

- பிற துறை அலுவலர்கள் மீது குற்றஞ்சாட்டப்பட்டாலோ அல்லது ஆதாரத்துடன் திட்டப்பணியில் குறைபாடு இயற்றி சுட்டிக்காட்டப்பட்டாலோ அதுபற்றி தீர்மானம் அந்த துறையின் மேல் அலுவலருக்கு நடவடிக்கைக்கு அனுப்ப வேண்டும்.

- ஒவ்வொரு பொருளாக விவாதித்து இறுதியில் தீர்மானம் இயற்ற வேண்டும். இயற்றப்பட்ட தீர்மானங்கள் மீண்டும் வாசிக்கப்பட்டு அதன்பின் இறுதி முடிவு செய்ய வேண்டும். இதன் பட்டியலை தனது கருத்துகளுடன் பற்றாளர் வட்டார வளர்ச்சி அலுவலருக்கு அனுப்ப

வேண்டும்.

- சலசலப்புகள், சச்சரவுகள், பிரச்சனைகள் ஊராட்சித் தலைவர் பற்றாளர் தலையிட்டு சுமுகமாக தீர்த்து வைக்க வேண்டும். தேவை ஏற்பட்டால் பற்றாளர் வேண்டிய உதவியை செய்ய வேண்டும். பிரச்சனைகள் கட்டுக்கடங்ாமல் சென்றால் கிராமசபை கூட்டத்தை ஒத்தி வைக்கலாம்.

- சூழ்நிலையை கருத்தில் கொண்டு மீண்டும் போதிய காவல்துறை பாதுகாப்புடன் கிராம சபையைக் கூட்ட உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்.

- பொதுமக்கள் கூறும் குற்றச்சாட்டு ஆவணங்கள் மூலம் பொய்யானது என நிரூபிக்கப்பட்டால் தலைவர்கள்/உறுப்பினர்கள் செல்வாக்கு மக்களிடையே அதிகரிக்கும். அவ்வாறு செய்யாத தலைவர்கள் உறுப்பினர்கள் மீது மக்களுக்கு சந்தேகம் ஏற்பட வாய்ப்பு ஏற்படும் என்பதை நினைவில் கொண்டு ஊராட்சி தலைவர் பொறுப்புடன் நடந்துகொள்ள வேண்டும்.

- சட்டமன்ற பாராளுமன்ற உறுப்பினர்கள் கிராமத்தினுடைய வாக்காளர்கள் என்ற முறையில் கருத்து சொல்ல அனுமதிக்க வேண்டுமேயொழிய அவர்கள் தனிப்பட்ட மரியாதையை எதிர்பார்க்ககூடாது.

## கிராம சபை நடத்தும் முறை செய்ய வேண்டியவை/செய்யக் கூடாதவை

### செய்ய வேண்டியவை

- கிராமசபைக் கூட்டத்தில் விவாதிக்கப்பட வேண்டிய பொருள்களை ஊராட்சியில் தீர்மானம் இயற்றி முடிவு செய்து அதன் அடிப்படையில்தான் விவாதிக்க வேண்டும்.

- கிராமசபை நடக்கும் நாள், நேரம் மற்றும் இடம் குறித்து 7 நாட்களுக்கு முன்னதாக ஊராட்சி அலுவலகம் மற்றும் பொதுமக்கள் கூடும் இடங்களில் அறிவிப்பு வெளியிட வேண்டும்.

- கிராமத்தில் உள்ள முக்கிய பிரமுகர்களை தலைவர், உறுப்பினர்கள் கிராமசபைக் கூட்டத்திற்கு நேரில் சென்று அழைக்கலாம். வார்டு உறுப்பினர்கள் அந்தந்த வார்டு மக்களை திரட்டுவதற்கு பொறுப்பேற்க வேண்டும்.

- துண்டுப் பிரசுரம், தண்டோரா மற்றும் ஒலிபெருக்கி மூலம் கிராமத்தின் அனைத்துப் பகுதிகளிலும் விளம்பரப் படுத்தலாம்.

- கூட்டம் நடைபெறுவதற்கு, 2 அல்லது 3 நாட்களுக்கு முன்னதாக திருவிழா போன்ற உணர்வு ஏற்படுமாறு விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். கிராமசபைக் கூட்டத்திற்கு முன்பாக கிராமசபை மற்றும் வளர்ச்சிப் பணிகளைப் பற்றி பட்டிமன்றம், கருத்தரங்கம், பொம்மலாட்டம், வில்லுப்பாட்டு, ஓரங்க நாடகம் போன்றவற்றை நடத்தி விழிப்புணர்வை ஏற்படுத்தலாம்.

- கிராமசபைக் கூட்டம் நடைபெறுவதற்கு முன்னதாக வளர்ச்சித் துறை வெளியிட்டுள்ள இலவச வெளியீடுகள், துண்டுப் பிரசுரங்கள், திட்ட விளக்கக் குறிப்புகள் ஏதும் இருப்பின் அவைகளைப் பெற்று கிராமசபையின்போது விநியோகம் செய்யலாம்.

- கிராமசபை கூட்டம் ஊராட்சி எல்லைக்குள்ளேயே திறந்தவெளியில், இயற்கை சூழலில் உள்ள இடம், பள்ளிக் கூடங்கள், சமுதாயக் கூடங்கள் போன்ற பொது இடங்களில் மக்களுக்கு வசதியான பகல் நேரத்தில் நடத்த வேண்டும். இது பொது இடமாக இருப்பது அவசியம்.

- கிராம ஊராட்சியின் கணக்குகளை சமுதாய தணிக்கை செய்யும் பொருட்டு வரவு-செலவு கணக்குகள், பதிவேடுகள், செலவுச் சீட்டுகள் போன்ற ஆவணங்களை ஊராட்சி அலுவலகத்தில் பாதுகாப்புடன் பாதுகாப்புடன் பார்வைக்கு வைக்க வேண்டும்.

- திட்ட செயல்பாடுகளை விளக்குவதற்கு கரும்பலகை போன்ற உபகரணங்களை உபயோகப்படுத்தலாம்.

- கூட்டத் தலைவர் ஒவ்வொரு பொருளாக எடுத்துரைக்க அதன் மீது விவாதித்து உரிய தீர்மானம் நிறைவேற்றி தனிப் பதிவேட்டில் பதிவு செய்து கூட்டத்தில் பங்கேற்ற அனைத்து உறுப்பினர்களின் கையொப்பம் பெறப்பட வேண்டும்.

- ஊராட்சித் தலைவர் மற்றும் கிராம ஊராட்சியின் நிர்வாகம் மீதான குறைகள் மற்றும் தவறுகளை பொதுமக்கள் சுட்டிக்காட்டினால், உரிய பதிலை சம்பந்தப்பட்ட நபர் ஆதாரப் பூர்வமாக பொறுமையாக விளக்கவேண்டும். ஆத்திரப்பட கூடாது.

- பொது மக்களும் பதட்டமில்லாமல் பொறுமையுடன் குறைபாடுகளை சுட்டிக் காட்ட அவர்களுக்கு அறிவுரை வழங்க வேண்டும்.

- எடுக்கப்பட்ட முடிவின் அடிப்படையில் சம்பந்தப்பட்ட துறைக்கு நடவடிக்கைக்கு தீர்மான நகல் அனுப்பப்பட வேண்டும். இயற்றப்பட்ட தீர்மானங்கள் மீண்டும் கிராம சபை கூட்டத்தில் வாசிக்கப்பட வேண்டும்.

## செய்யக் கூடாதவை

- கிராமசபைக் கூட்டத்திற்கு 10 சதவீதத்திற்கும் குறைவான உறுப்பினர்கள் கலந்து கொண்டால் கூட்டத்தினை நடத்துதல் கூடாது.

- ஒவ்வொரு பொருள் மீதும் தீர்மானம் இயற்றிய பின்னர் அது குறித்து எவ்வித கலந்துரையாடலும் அனுமதிக்கக் கூடாது.

- கிராமசபைக் கூட்டம் நடத்துவதற்கு பந்தல்கள் போட்டு வீணான செலவுகள் ஏதும் செய்தல் கூடாது.

- கிராமசபைக் கூட்டத்தை கூட்டத்தை இரவு நேரங்களில் நடத்தக்
- கூடாது.

- கிராமசபைக் கூட்டத்தினை சிறிய அறையில் நடத்தக் கூடாது.

- கிராமசபைக் கூட்டங்களுக்கு நாற்காலி, மேசை போன்றவை வாடகைக்கு எடுக்கக் கூடாது. கூட்டத்திற்கு வருகை தரும் எவருக்கும் தனிப்பட்ட மரியாதையோ, புகழ்ச்சியோ, இகழ்ச்சியோ செய்தல் கூடாது. உறுப்பினர்கள் அமர்வதற்கு கிராம ஊராட்சியிலுள்ள தார்பாய்களை பயன்படுத்தலாம்

- கிராமசபைக் கூட்டங்களில் மாலை, பொன்னாடைகளை அணிவித்தல் கூடாது.

- கிராமசபைக் கூட்டங்களில் அரசையோ, மற்ற உள்ளாட்சி அமைப்புகளையோ, அரசு துறைகளையோ, சம்பந்தப்பட்ட அலுவலர்களையோ தனிப்பட்ட முறையில் குறிப்பிட்டு விமர்சனம் செய்யக்கூடாது. தவறுகள் இருந்தால் ஆதாரபூர்வமாக கிராம சபைக்குத் தெரிவிக்கலாம் ஆனால்

- கிராமசபை கூட்டத்தைப் பற்றி செய்தித்தாளில் கிராம ஊராட்சி செலவில் விளம்பரங்கள் செய்யக்கூடாது.

## பற்றாளர்களுக்கான (NODAL OFFICER) அறிவுரைகள்

**ஒவ்வொரு ஊராட்சிக்கும் ஒரு பற்றாளரை மாவட்ட ஆட்சித்தலைவர் நியமிக்க வேண்டும். கிராம ஊராட்சிக்கும் தலைவருக்கும் பிறதுறைகளுக்கான உரிய விவரங்களை மாவட்ட ஆட்சித்தலைவரிடமிருந்து பெற்று வழங்குவது, கூட்டம் நடத்துவதற்கு செய்யப்படவேண்டிய விளம்பர உத்திகள் பற்றியும், கூட்டம் நடத்த வேண்டிய முறை குறித்தும் ஊராட்சி தலைவருக்கு ஆலோசனை வழங்குவது பற்றாளர்களின் கடமையாகும்.**

- பற்றாளர்கள் நியமிக்கப்பட்ட ஊராட்சிகளில் ஊராட்சிக்கூட்டம் நடத்தி விவாதிக்க வேண்டிய பொருள்கள் பற்றி முடிவு செய்யப்பட்டுள்ளதா என்று பார்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யாமலிருந்தால் கூட்டத்தை நடத்த தகுந்த அறிவுரை வழங்கலாம்.

- பிறதுறையில் நிறைவேற்றப்படும் திட்டங்கள், பயனாளிகள் பற்றி கிராமவாரியாக விவரங்களை மாவட்ட ஆட்சித்தலைவரிடம் பெற்று அதை ஊராட்சி தலைவரிடம் ஒப்படைக்க வேண்டும்.

- சம்மந்தப்பட்ட ஊராட்சியின் கிராம நிர்வாக அதிகாரி, கிராமப் பணியாளர்கள் இதர துறை களப்பணியாளாகள் கிராமசபைக் கூட்டத்திற்கு வருகை தர உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்.

- கிராம சபைக் கூட்டத்திற்கு ஊராட்சித்தலைவரும், உறுப்பினர்களும் அக்கறையுடன் விளம்பரம் செய்துள்ளனரா என்பதை கண்காணித்து குறைபாடுகள் இருப்பின் அதுபற்றி மாவட்ட ஆட்சித் தலைவருக்குத் தெரிவிக்க வேண்டும்.

- பற்றாளர்கள், எவ்வாறு கூட்டத்தை நடத்துவது , எந்த பொருள் பற்றி பேசுவது என ஊராட்சித் தலைவருக்கு அறிவுரை வழங்க வேண்டும். ஆனால் பற்றாளர்களே கூட்டத்தை நடத்துவதோ, விவாதப் பொருட்களை படிப்பதோ, விவாதத்தில் கலந்து கொள்வதோ கூடாது.

- கூட்டத்தின்போது தலைவர் மீது, உறுப்பினர்கள் குற்றச்சாட்டுகள் கூறினால், குற்றச்சாட்டு தொடுப்பவரை பொறுமையாக நடந்துக் கொள்ள சொல்ல வேண்டும். பொறுப்புடன் பதில் வழங்குதல் தலைவரின் கடமை என்பதை பற்றாளர்கள் எடுத்துக் கூற வேண்டும். அங்கு ஏற்படும் சலசலப்புகள், பிரச்சனைகளை சுமுகமாக தீர்க்க உறுதுணையக இருக்க வேண்டும்.

- சமூக தணிக்கைக்கு செலவு சீட்டுகள் பதிவேடுகள் அளவுப் புத்தகங்கள் பட்டியல்கள், இது போன்னற போன்ற ஆவணங்களைப் பாதுகாப்புடன் பொதுமக்கள் பார்வைக்கு வைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அதன் விபரத்தை அவ்வாறு செய்யாவிட்டால் அறிக்கையில் குறிப்பிட வேண்டும். குறைபாடு நிகழா வண்ணம் பார்த்துக் கொள்வது பற்றாளர்களின் பொறுப்பு.

- கிராம சபை கூட்டத்தில் இயற்றப்படும் தீர்மானங்கள் முறையாக பதிவேட்டில் பதியப்படுகிறதா என கண்காணிக்க வேண்டும்.

- கூட்டத்தை முடித்து விபரங்களை அறிக்கையாக திரட்டி தேவை ஏற்பட்டால் புகைப்படத்துடன் வட்டார வளர்ச்சி அலுவலரிடம் சமர்ப்பிக்க வேண்டும். அறிக்கையில் திட்டப் பணிகளில் உள்ள குறைபாடுகள் அலுவலர் மீதான குற்றச்சாட்டு, ஊராட்சி தலைவர்/உறுப்பினர் மீதான குற்றச்சாட்டு சம்பந்தமாக இயற்றப்பட்ட தீர்மான விவரம் மற்றும் அதன் உண்மை நிலை போன்றவற்றையும் சட்டம் ஒழுங்கு பிரச்சனை ஏற்பட்டிருந்தால் அதன் விபரத்தையும் கண்டிப்பாக குறிப்பிட வேண்டும்.

- வாக்காளர் எண்ணிக்கை, கூட்டத்தில் கலந்து கொண்டவர் எண்ணிக்கை போன்ற விபரங்களை அறிக்கையில் சுட்டிகாட்ட வேண்டும்.

- குறைந்தபட்ச (10%) உறுப்பினர்கள் இல்லாமல் கூட்டம் நடத்த உடந்தையாக இருப்பதும், கூட்டம் நடத்தாமல் நடந்தது பொய்யான அறிக்கை சமர்பிப்பதும் தவிர்க்கப்பட வேண்டும். இவ்வாறு செய்யும் கடமையிலிருந்து தவறிய பற்றாளர்கள் மீது கடுமையான ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும்.

- கூட்டம் முடிந்த 24 மணி நேரத்தில் அறிக்கை தயாரித்து வட்டார வளர்ச்சி அலுவலரிடம் (ஊராட்சிகள்) சமர்ப்பிக்க வேண்டும். அறிக்கையில் குறிப்பிடத்தக்க சம்பவங்கள், சட்டம் ஒழுங்கு பிரச்சனை, திட்டங்களில் சுட்டிக் காட்டப்பட்ட குறைபாடுகள், அலுவலர்கள் மீதான குற்றச்சாட்டு போன்றவை பற்றி குறிப்பிட வேண்டும்.

- கூட்டம் நடத்தப்படவில்லையாயின் அதன் விபரம், காரணம் போன்றவற்றை அறிக்கையில் வேண்டும். கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டால் அதற்கான காரணத்தை குறிப்பிட வேண்டும்.

# கிராமசபை கூட்டம் நடத்த மாவட்ட ஆட்சித் தலைவர்கள் கடைபிடிக்க வேண்டிய நெறிமுறைகள்

**1994-ஆம் ஆண்டு தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் (16) பிரிவின்படி மூன்றடுக்கு ஊராட்சிகளின் ஆய்வாளர் என்ற முறையில் உள்ளாட்சி அமைப்புகளின் செயல்பாடுகளை ஊக்குவித்து அவற்றைக் கண்காணிக்கும் முழுப்பொறுப்பு மாவட்ட ஆட்சித்தலைவர்களையே சாரும். எனவே கிராமசபையைக் கூட்டவும், உரிய முறையில் அவை நடைபெற்று சமூக தணிக்கை னிக்கை மற்றும் பிற பணிகளை செவ்வனே செயல்படுத்தவும் திட்டமிட்டு நடைமுறைப் படுத்துவது மாவட்ட ஆட்சித் தலைவர்களின் முழுப் பொறுப்பாகும்.**

**இது குறித்து மாவட்ட ஆட்சித் தலைவர்கள் கீழ்கண்ட வழிமுறைகளை கவனமாக கடைபிடிக்க வேண்டும்.**

- கிராமசபையின் நோக்கம் அதில் பொதுமக்கள் கலந்து கொள்ள வேண்டிய அவசியம், ஊராட்சித் தலைவர்கள் கிராமசபையை சட்டப்படி கூட்ட வேண்டிய பொறுப்பு, அவசியமான பொருள்களை கிராம சபையில் வைத்து வெளிப்படையான நிர்வாகத்திற்கு வழிவகுத்தல், சமூக தணிக்கை, பல்துறைகளின் திட்டப் பணிகளில் ஏற்படும் குறைகளுக்கு பொறுப்பானவர்கள் சுட்டிக் காட்டப்படும் அலுவலர்கள் மீது நடவடிக்கை எடுத்தல் போன்றவை பற்றி பொதுமக்களிடம் பொதுமக்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும்.

- இதற்கென திட்டமிட்டு பல்வேறு பிரச்சார உத்திகளை பயன்படுத்த வேண்டும். கருத்தரங்கம் நடத்துதல், கிராமப் புறங்களில் விழிப்புணர்வு முகாம் நடத்துதல், ஊர்வலங்கள், வில்லுப்பாட்டு, கலைக் கூத்து நடத்துதல், துண்டு பிரசுரங்கள், சுவரொட்டிகள், , கையேடுகள் தயாரித்து விநியோகித்தல், வானொலி விளம்பரம், சினிமா சிலைடுகள் என பல்வேறு உத்திகளை பயன்படுத்தலாம்.

- அரசு சாரா நிறுவனங்கள் போன்றவற்றை இதற்கென முழுமையாக பயன்படுத்திக் கொண்டு கிராமசபை பற்றிய சமுதாய விழிப்புணர்வை ஏற்படுத்துவது மாவட்ட ஆட்சித்தலைவர்களின் கடமையாகும்.

- மாவட்ட ஆட்சித்தலைவர்கள், கிராம சபை கூட்டத்தை குறிப்பிட்ட தேதியில் நடத்துவதற்கு முன்பு விரிவான அறிவுரைகளை கிராம ஊராட்சிகள், ஊராட்சி ஒன்றியங்கள் மற்றும் அதன் அலுவலர்களுக்கு வழங்க வேண்டும்.

- கிராம சபை கூட்டத்தில் ஊராட்சி ஒன்றியங்கள், ஊராட்சி ஒன்றிய அலுவலர்கள், மாவட்ட ஊராட்சிகள் மற்றும் அதன் அலுவலர்களை முழுமையாக ஈடுபடுத்தப்பட வேண்டும்.

- சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்களையும் இம்முயற்சியில் ஈடுபடுத்த வேண்டும். இதற்கென உரிய வேண்டுகோளை மாவட்ட ஆட்சித்தலைவர்கள் விடுக்கலாம். மாவட்ட ஆட்சிததலைவர்கள்

- ஒவ்வொரு கிராம ஊராட்சிக்கும் தகுதியான பற்றாளர்களை நியமிக்க வேண்டும். பல்வேறு துறைகளைச் சார்ந்த அலுவலர்களை ஒன்று திரட்டி, குறிப்பாக உதவியாளர் நிலையிலும் அதற்கு மேல் உள்ளவர்களையும் பயன்படுத்தி பற்றாளர்களை நியமிக்கலாம். இவர்களுக்கு உரிய பயிற்சி முகாமை நடத்த மாவட்ட ஆட்சியர் உரிய ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

- கிராம சபைக்கூட்டத்தில் விவாதிக்கப்படும் பொருட்களை முடிவு செய்ய ஊராட்சிகளுக்கு அறிவுறுத்த வேண்டும். பொதுவான விவாதப் பொருட்கள் இருந்தால் அவற்றை மாவட்டம் முழுமைக்கும் சேர்த்துக் கொள்ள அறிவுறுத்த வேண்டும்.

- மாவட்ட ஆட்சித்தலைவர்கள் முனைப்போடு செயல்பட்டு கிராம சபைக்கூட்டம் நடத்தப்படும் தேதி, பொது மக்கள் கலந்து கொள்ள வேண்டிய அவசியம் ஆகியவற்றைத் தெரிவித்து பத்திரிக்கை செய்தி வெளியிடலாம். வானொலி, சினிமா சிலைடு, துண்டுப் பிரசுரங்கள் போன்ற பல விளம்பர உத்திகளைப் பயன்படுத்தலாம். விரிவான சுற்றறிக்கைகள், கையேடுகள், துண்டு பிரசுரங்கள் மாவட்ட அளவில் தயாரித்து அளவில் தயாரித்து பயன்படுத்த வேண்டும்.

(அ) ஊரக வளர்ச்சித் துறை மூலம் நிறைவேற்றப்படும் தனிநபர் பயன் பெறும் திட்டங்களான ஒழிப்புத் திட்டம், தொகுப்பு வீடுகள் ஆகியவற்றில் தகுதியான பயனாளிகள் தேர்வு செய்யப்பட்டு கிராம சபை மூலமே அனுமதிக்கப்பட வேண்டும்.

(ஆ) அண்ணா மறுமலர்ச்சித் திட்டம் நிறைவேற்றப் படும் கிராமங்களிலும், பிற கிராமங்களிலும் தீட்டப்படும் கிராம வளர்ச்சித் திட்டம் கிராம சபையில் விவாதிக்கப்பட்டு கிராம சபையின் அனுமதி பெறப்பட வேண்டும்.

(இ ஒவ்வொரு கிராம ஊராட்சியிலும் தேவைவயான அடிப்படை வசதிகள் சமூக பணிகள் குறித்த பொது மக்ககளின் கோரிக்கைகள் கிராம

சபையில் தொகுக்கப்பட்டு இவை மக்களின் அவசியத் தேவைகள் அடிப்படையில் முன்னுரிமை படுத்தப்பட்டு பல்வேறு திட்டங்களில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய திட்டப் பணிகள் குறித்த பட்டியலை கிராம சபை மூலம் அனுமதிக்கப்பட வேண்டும்.

(ஈ) ஒவ்வொரு கிராமத்திலும் நமக்கு நாமே திட்டத்தில் எடுத்து செய்யப்பட வேண்டிய பணிகள் பற்றியும், மக்ககளின் பங்களிப்பு பற்றியும் விவாதித்து கிராம சபை மூலம் முடிவு செய்ய வேண்டும்.

- மாவட்ட ஆட்சித் தலைவர் பிற துறைகளில் நிறைவேற்றப் பட்ட திட்டங்கள், தனி நபர் திட்டங்களில் பயனாளிகள் போன்ற விவரங்களை, கிராம வாரியாக சம்மந்தப்பட்ட துறையிடமிருந்து பெற்று அவற்றைத் தொகுத்து கிராம சபை நடைபெறும் விவாதத்திற்கு முன் பற்றாளர்களிடம் ஒப்படைக்க வேண்டும்.

1. ஊரக வளர்ச்சித் துறையின் திட்டப் பணிகள் (மாவட்ட, ஒன்றிய, கிராம ஊராட்சி மூலம் செய்யப்படும் பணிகள்.

2. சட்டமன்ற மற்றும் பாராளுமன்ற தொகுதி மேம்பாட்டுத் திட்டப் பணிகள்.

3. பொதுப் பணித் துறை.

4. நெடுஞ்சாலைத் துறை போன்ற துறை செய்யும் பணிகள் பற்றிய விவரம் கிராம வாரியாக பெற்று தொகுக்கப்பட வேண்டும்.

**அதேபோல்**

1. ஊரக வளர்ச்சித்துறை.

2. வருவாய் துறை.

3. சமூக நலத் துறை.

4. ஆதிதிராவிடர் நலத் துறை.

5. விவசாயத்துறை.

6. தோட்ட கலை துறை மூலம் வழங்கும் நிதி உதவி, தனி நபர் பயன்பெறும் திட்டத்தில் பயனாளிகள் பெற்ற உதவி பற்றியும் அந்த துறையிடமிருந்து பெற்று கிராம வாரியாக தொகுக்க வேண்டும்.

- பற்றாளர்களின் கடமைகள், பொறுப்புகள் கிராம சபை கூட்டம் நடைபெற எடுக்கும் நடவடிக்கைகள் போன்றவை குறித்து ஒரு விரிவான பயிற்சி நடத்தப்பட வேண்டும். அதில் பற்றாளர்கள் பிறதுறையைச் சார்ந்த விவரங்களை ஊராட்சி தலைவரிடம் ஒப்படைப்பதுடன் கூட்டம் நல்ல முறையில் நடைபெறுவதற்கு உறுதுணையாக செயல்படுத்துவதற்கும் தெளிவுரை வழங்க வேண்டும். பற்றாளர்கள் கூட்டத்தில் விவரங்களை வாசிப்பதோ, விவாதிப்பதோ கூடாது என தெளிவு படுத்த வேண்டும்.

- ஊராட்சித் தலைவர்கள் மற்றும் உறுப்பினர்களுக்கு ஒன்றியம் தோறும் பயிற்சி முகாம் நடத்த வேண்டும். பயிற்சி முகாம்களில் சந்தேகம் எழுப்புவது மக்களின் உரிமை என்பதையும் குற்றச்சாட்டுகளுக்கு பதிலளிக்க வேண்டியது பிரதிநிதிகளின் பொறுப்பும் கடமையும் என்பதையும் தெளிவாக விளக்கப்பட வேண்டும். நடைமுறைக் கையேடுகள் தயாரித்து விநியோகிக்கலாம்.

- மாதிரி கிராம சபைக் கூட்டங்களை நடத்துவது சாலச் சிறந்தது.

- கிராம சபையை மேற்பார்வையிட மண்டல அதிகாரிகள் நியமிக்க வேண்டும். தேர்தலைப் போன்ற ஒரு பரபரப்பு ஏற்படுத்துவது ஆரம்ப காலங்களில் மிகவும் அவசியம். ஒவ்வொரு கிராமத்திலும் சம்மந்தப்பட்ட கிராம நிர்வாக அதிகாரிகள் கிராமப் பணியாளர்கள் மற்றும் பிற துறைகளைச் சார்ந்த களப் பணியாளர்கள் அந்தந்த கிராம சபையில் கட்டாயம் கலந்து கொள்ள மாவட்ட ஆட்சியர் சம்பந்தப்பட்ட துறை அலுவலர் மூலம் அறிவுரை வழங்க வேண்டும்.

- கிராம சபைக் கூட்டம் குறிப்பிட்ட நேரத்தில் கூட்டப்பட்டு குறைந்த பட்ச உறுப்பினர்கள் (10 சதவிகிதம்) வரவில்லையென்றால், ஒத்திவைக்க அறிவுரை வழங்க வேண்டும். 10 சதவிகிதத்துக்கு மேல் வாக்காளர்கள் வருகை புரிந்திருந்தால் ஊராட்சியால் தீர்மானம் செய்யப்பட்ட பொருட்கள் குறித்து முன்னுரை வழங்கி ஒவ்வொரு பொருளாக விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டும். விவாதத்தின் இறுதியில் நிறைவேற்றப்படும் தீர்மானங்கள் முறையாக பதிவு பதிவு செய்யப்பட்டு அதன் விவரம் துறைவாரியாக பிரிக்கப் பட்டு, சம்மந்தப்பட்ட துறைத் தலைவருக்கு நடவடிக்கைக்கு அனுப்பப்பட வேண்டும். இதுபற்றிய விவரங்கள் ஊராட்சி தலைவர்கள், மற்றும் பற்றாளர்களின் பயிற்சியில் தெளிவுபடுத்தப்பட வேண்டும்.

- மாவட்ட ஆட்சித்தலைவர் கிராமசபை நடைபெறும் தேதியன்று பல்வேறு ஊர்களுக்கு சென்று பார்வையிட வேண்டும். அதேபோல்

மாவட்ட வருவாய் அலுவலர், திட்ட அலுவர், பிற துறை அலுவலர்களையும் மேற்பார்வையிட அறிவுறுத்தலாம்.

- பற்றாளர்களின் அறிக்கையை வட்டார வளர்ச்சி அலுவலர் தொகுத்து 2 நாட்களுக்குள் மாவட்ட ஆட்சித் தலைவரிடம் சமர்பிக்க வேண்டும். இதற்கென ஒரு சிறப்பு கூட்டத்தை மாவட்ட ஆட்சித்தலைவர்கள் நடத்த வேண்டும். இதனால் கிராம சபைக் கூட்டத்தில் நடைபெற்ற விவாதங்கள், பல்வேறு பிரச்சனைகள் குறித்து விவரம் பெற்று, அடுத்த கிராம சபைக் கூட்டத்தில் மேலும் அதன் செயல்பாட்டை செம்மையாக்குவதற்கு உதவும். ஒன்றியம் வாரியாக வரப்பெற்ற அறிக்கைகளை தொகுத்து அரசுக்கு அறிக்கை அனுப்ப வேண்டும்.

- ஒத்தி வைக்கப்பட்ட கூட்டங்களை மீண்டும் கூட்ட மாவட்ட ஆட்சித் தலைவர் நடவடிக்கை எடுக்க வேண்டும். வேண்டுமென்றே கிராம சபைக் கூட்டத்தை நடத்தாத கிராம ஊராட்சிகள் மீதும், கிராம சபைக் கூட்டம் நடந்ததாக, பொய்யான தகவல்கள் வந்திருந்தால் இது குறித்து விசாரித்து அதுபோன்ற ஊராட்சிகள் மீதும் சட்டப்படியான நடவடிக்கைத் தொடர வேண்டும்.

- அரசு நியமிக்கும் பார்வையாளராக வரும் அலுவலர்களுக்கு அனைத்து விவரங்களையும் வழங்க வேண்டியது மாவட்ட ஆட்சித் தலைவர்களின் பொறுப்பாகும்.

# பார்வையாளர்களுக்கான ஆய்வுக் குறிப்பு (CHECK LIST)

1. கிராம சபை கூட்டம் நடத்துவதற்கு ஏழு நாட்கள் முன்னதாக முன்னறிவிப்பு செய்யப்பட்டதா?
2. கிராம சபைக் கூட்டத்தில் விவாதிக்கப்பட வேண்டிய பொருள்கள் குறித்து கிராம ஊராட்சிக் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டதா?
3. பற்றாளர்கள் நியமிக்கப்பட்டார்களா ?
4. பற்றாளர்களுக்கு பயிற்சி வகுப்பு நடைபெற்றதா?
5. தலைவர்களுக்கு பயிற்சிமுகாம் நடத்தப்பட்டதா?
6. மாவட்டத்தில் கிராமசபை பற்றி விழிப்புணர்வு ஏற்படுத்த மாவட்ட ஆட்சித்தலைவர் முயற்சி செய்தாரா?
7. பத்திரிக்கை செய்தி, சினிமா சிலைடு, வானொலி மூலம் விளம்பரம் செய்யப்பட்டதா? துண்டு பிரசுரம், கையேடு போன்றவை விநியோகிக்கப்பட்டதா?
8. பிற துறை தலைவரிடமிருந்து விவரங்களை பெற்று மாவட்ட ஆட்சித் பற்றாளர்கள் ஊராட்சி தலைவரிடம் ஒப்படைத்தனரா?
9. கிராம நிர்வாக அலுவலர், கிராம பணியாளர்கள் மற்றும் பிற துறை களப்பணியாளர்கள் கூட்டத்தில் கலந்து கொள்ள அறிவுரை வழங்கப்பட்டுள்ளதா?.
10. கிராம சபைக் கூட்டம் எல்லா ஊராட்சிகளிலும் நடைபெற்றதா?
11. அனைத்து ஊராட்சிகளிலும் போதுமான உறுப்பினர்களின் எண்ணிக்கையுடன் (Quorum) கூட்டம் நடைபெற்றதா?
12. கூட்டத்தில் ஊராட்சித்தலைவர் விவாதப் பொருட்களை எடுத்துரைத்து முறையாக நடத்தினாரா?
13. பொதுமக்கள் ஆண், பெண் சாதி வேறுபாடின்றி சுதந்திரமாக விவாதத்தில் கலந்து கொண்டனரா?
14. சமூக தணிக்கைக்கு ஏற்பாடு செய்யப்பட்டு இருந்ததா?

15. ஏதேனும் ஊராட்சிகளில் கிராம சபை கூட்டப்படாமலிருந்தால் அதற்கான காரணங்கள் நியாயமானவையா?

16. 16. பிற துறையைச் சார்ந்த திட்டங்கள், மற்றும் பயனாளிகள் பற்றிய விவரங்களை முழுமையாகப் பெற்று ஊராட்சிகளுக்கு வழங்கப்பட்டதா?

17. கிராம சபையை மேலும் சிறப்பாக நடத்த பார்வையாளர்கள் தங்கள் அனுபவத்தின் அடிப்படையில் அரசுக்கு அளிக்கும் கருத்து என்ன?

## BDO

- மொத்த ஊராட்சிகள் எண்ணிக்கை.
- கிராம சபை நடந்த ஊராட்சிகள் எண்ணிக்கை.
- போதுமான் உறுப்பினர்கள் வருகை (Quorum) இல்லாததால் கூட்டம் ஒத்திவைக்கப்பட்ட ஊராட்சிகள் எண்ணிக்கை.
- 6 மாதத்திற்கு மேலாக கிராம சபை நடைபெறாத ஊராட்சிகள் எண்ணிக்கை மற்றும் அவற்றின் பெயர்கள்.

அனுப்புநர்
பிரவீன் பி.நாயர், இ.ஆ.ப.,
இயக்குநர்,
ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சி இயக்ககம்,
பனகல் மாளிகை, சைதாப்பேட்டை,
சென்னை– 15.

பெறுநர்
மாவட்ட ஆட்சித் தலைவர்,
அனைத்து மாவட்டங்கள்
(சென்னை நீங்கலாக)

ந.க.எண்.73232/2021/ஊராட்சி .2.3, நாள்: 19.04.2022

அய்யா/அம்மையீர்,

பொருள்: ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறை – கிராம சபைக் கூட்டம் – தொழிலாளர் தினமான 01.05.2022 அன்று கிராம சபைக் கூட்டம் நடத்துதல் – கூட்டப் பொருள்கள் அனுப்பி வைத்தல் – தொடர்பாக.

பார்வை: 1) அரசாணை (நிலை) எண்.245, ஊ.வ.(சி1) துறை, நாள் 19.11.1998.
2) அரசாணை (நிலை) எண்.130, ஊரகவளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறைநாள் 25.9.2006

---------

பார்வை 1–ல் கண்டுள்ள அரசாணைப் படி, தொழிலாளர் தினமான 01.05.2022 அன்று அனைத்து கிராம ஊராட்சிகளிலும் கிராம சபைக் கூட்டம் நடத்தப்பட வேண்டும். கிராம சபைக் கூட்டத்தினை ஊராட்சியின் எல்லைக்குட்பட்ட வார்டுகளில் சுழற்சி முறையை பின்பற்றி 01.05.2022(தொழிலாளர் தினம்) அன்று காலை 11.00 மணி அளவில் நடத்த வேண்டும். பார்வை 2–ல் காணும் அரசாணையில் குறிப்பிட்டுள்ளவாறு குறைவெண் வரம்பின்படி உறுப்பினர்களின் வருகை இருப்பதை உறுதி செய்து கிராம சபைக் கூட்டம் நடத்தப்பட வேண்டும்.

பார்வை 1–ல் கண்டுள்ள அரசாணையில் குறிப்பிட்டுள்ள பொருள்களுடன் 01.05.2022 அன்று நடைபெறவுள்ள கிராம சபைக் கூட்டத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டிய பொருள் விபரங்கள் இத்துடன் இணைத்து அனுப்பப்படுகிறது. தங்கள் மாவட்டத்தில் உள்ள அனைத்து கிராம ஊராட்சிகளிலும், அனைத்து கிராம மக்களும் ஆர்வத்துடன் எதிர்வரும் கிராம சபைக் கூட்டத்தில் கலந்துக் கொள்ள ஏதுவாக கிராம சபைக் கூட்டம் நடைபெறவுள்ள இடம், நேரம் ஆகியவற்றை கிராமமக்களுக்கு தெரியப்படுத்த வேண்டும்,

## 01.05.2022 தொழிலாளர் தினம் அன்று கிராம சபா கூட்டத்தில் விவாதிக்க வேண்டிய கூட்டப் பொருள்கள்_விவரம்

**பொருள்: 1 கிராம ஊராட்சி நிர்வாகம் மற்றும் பொது நிதி செலவினம் குறித்து விவாதித்தல்**

கிராம ஊராட்சிகளில், அக்டோபர் 2021 முதல் ஏப்ரல் 2022 முடியவுள்ள காலத்தில் கிராம ஊராட்சியின் பொது நிதியில் இருந்து கீழ்க்கண்ட தலைப்புகளில் மேற்கொண்ட செலவின அறிக்கை மற்றும் இதர விவரங்களை கிராம சபையில் படித்துக் காண்பித்து, ஒப்புதல் பெறப்பட வேண்டும்.

i. குடிநீர் வசதிக்கான செலவினங்கள் – கைப்பம்பு, விசைப்பம்பு மற்றும் மேல்நிலை நீர்த் தேக்கத் தொட்டிகள் பராமரிப்புச் செலவின விவரங்கள்.

ii. மின்சார வசதிக்கான செலவினங்கள்

iii. பொது நிதியில் எடுக்கப்பட்ட மூலதனப் பணிகள் அதன் முன்னேற்றம் மற்றும் நிதி செலவின விபரம்

iv. இதர நிர்வாக செலவினங்கள் விபரம்.

**பொருள்: 2 சுகாதாரம் (பள்ளி கழிப்பறைகள் மற்றும் அங்கன்வாடி மையக் கழிப்பறைகள்):**

i. கிராம ஊராட்சியில் உள்ள பள்ளிகள் மற்றும் அங்கன்வாடி மையக் கழிப்பறைகள் பயன்படுத்தப்படுத்துவது குறித்து விவாதித்தல்.

ii. அரசு பள்ளிகள் மற்றும் ஊராட்சி ஒன்றியப் பள்ளிகள் கழிப்பறைகளை பராமரித்திட கிராம வறுமை ஒழிப்புச் சங்கம்/ஊராட்சி அளவிலான சுய உதவிக்குழுக்களின் கூட்டமைப்பு மூலம் ஈடுபடுத்தப்படும் துப்புரவுப் பணியாளர்கள் பள்ளிகளில் உள்ள கழிப்பறைகளை ஒவ்வொரு நாளும் இரண்டு முறை சுத்தம் செய்தல், பள்ளி துவங்கும் முன்பு வகுப்பறைகளை தூய்மைபடுத்துதல், பள்ளி வளாகத்தினை வாரம் ஒரு முறை தூய்மைபடுத்துதல், கழிப்பறைகளில் தண்ணீர் வசதிகள் ஏற்படுத்தியது குறித்து விவாதித்தல்.

**பொருள்: 3. ஊராட்சிப் பகுதிகளில் நடைபெற்று வரும் பல்வேறு திட்டப் பணிகளின் முன்னேற்றம் மற்றும் நிதி செலவின விபரங்கள் குறித்து விவாதித்தல்**

நடப்பு நிதியாண்டில் (2022–23) ஊராட்சிப் பகுதியில் நடைபெறும் ஒன்றிய அரசு மற்றும் மாநில அரசு நிதியில் நடைபெற்று வரும் பல்வேறு வளர்ச்சித் திட்டப் பணிகளின் முன்னேற்றம் மற்றும் நிதி செலவினம் குறித்து பொது மக்களுக்கு தெரிவித்தல்.

**பொருள்: 4 மக்கள் திட்டமிடல் இயக்கம் ( People's Plan Campaign)**

15வது நிதி மானியக் குழுவினால் கிராம ஊராட்சிகளுக்கு வழங்கப்படும் மானிய நிதி கிராம ஊராட்சி வளர்ச்சித் திட்டத்தின் அடிப்படையில் பயன்படுத்தப்பட வேண்டும். கிராம ஊராட்சிகளில் ஏற்கனவே உள்ள கட்டுமான வசதிகள் மற்றும் இதர வசதிகள் ஆகியனவற்றைக் கருத்திற்கொண்டு 2022–23 ஆம் நிதியாண்டிற்கு தேவையான பணிகள், வசதிகள் ஆகியவற்றைத் தொகுத்து கிராம ஊராட்சி வளர்ச்சி திட்டம் தயாரித்தல் வேண்டும். ஏற்கனவே கிராம ஊராட்சி வளர்ச்சித் திட்டங்கள் ஆண்டு தோறும் தயாரிக்கப்பட்டு இருப்பினும் இதனை மேலும் வலுப்படுத்தும் வகையிலும் பொது மக்களின் பங்களிப்புடன் மக்கள் இயக்கமாக மாற்றிட உத்தேசித்து ஒன்றிய மாநில அரசுகள் பொது மக்களுக்கான திட்டமிடல் இயக்கத்தினை அறிவித்துள்ளது. அதனடிப்படையில் 2022 –23 ஆம் ஆண்டிற்கான கிராம ஊராட்சி வளர்ச்சி திட்டம் தயாரிக்கப்பட்டு e–கிராம சுயராஜ் இணையதளத்தில் உள்ளீடு செய்யப்பட்டுள்ளது. 15வது நிதிக்குழு மானியத்தினைப் பொருத்தவரையில் வட்டார வளர்ச்சி மேம்பாட்டு திட்டம் மற்றும் மாவட்ட வளர்ச்சி திட்டம் ஆகியனவும் திட்டமிடுதல் வேண்டும். அதற்கான வேலைகளை/பணிகளைக் கண்டறிந்து அவற்றை மேம்பாட்டுத் திட்டத்தில் சேர்த்திட ஆவண செய்தல் வேண்டும்.

பொருள்: 5 – ஊட்டச்சத்து இயக்கம்(POSHAN Abhiyaan)

பெண்கள் மற்றும் குழந்தைகளின் ஆரோக்கியம் மற்றும் தனிநபர் சுகாதாரத்தினை மேம்படுத்திடும் வகையில் ஊட்டச்சத்து இயக்கம் (POSHAN Abhiyaan) நடத்த ஒன்றிய அரசால் தீர்மானிக்கப்பட்டதைத் தொடர்ந்து செப்டம்பர் மாதத்தினை தேசிய ஊட்டச்சத்து மாதமாக (National Nutrition Month) தமிழ்நாட்டிலுள்ள அனைத்து கிராம ஊராட்சிகளிலும் கொண்டாடப்பட்டது.

மேலும், ஊட்டச்சத்து மற்றும் சுகாதாரம் தொடர்பான முகாம்கள் மற்றும் இதர நடவடிக்கைகள் குறித்து இடைக்கால ஆய்வு நடத்தப்பட வேண்டும்.

மேற்படி, ஊட்டச்சத்து மற்றும் சுகாதாரம் தொடர்பான விவரங்கள் தமிழகத்திலுள்ள அனைத்து கிராமப்புற மக்களையும் சென்றடையும் வகையிலும் மேலும் இது தொடர்பாக நடத்தப்படும் அனைத்து முகாம்களிலும் கிராமப்புற மக்களை பங்கு பெறச் செய்திடும் வகையிலும் பின்வரும் நடவடிக்கைகளை எடுத்திட வேண்டும்.

- மேற்படி இயக்கம் தொடர்பான தகவல்கள் ஒவ்வொரு குக்கிராம அளவிலும் சென்று சேரும் வகையிலும் மேலும் இவ்வியக்கத்தில் அனைத்து கிராமப்புற மக்களும் பயன்பெறும் வகையிலும் சுய உதவிக் குழு உறுப்பினர்கள், கிராம அளவிலான கூட்டமைப்புகள் (PLF) மற்றும் கிராம வறுமை ஒழிப்பு சங்க உறுப்பினர்கள் (VPSC) ஆகியோர்களை பங்கு பெற செய்ய வேண்டும்.
- இவ்வியக்கத்தில் சமுதாயத் தலைவர்கள் / ஊர் பெரியவர்களையும் பங்கு பெற செய்ய வேண்டும்.
- அனைத்து ஊராட்சி ஒன்றிய பள்ளிக் கட்டிடங்கள் மற்றும் அங்கன்வாடி மையங்களில் பாதுகாப்பான குடிநீர் வசதி செய்யப்பட்டுள்ளதை உறுதி செய்தல் வேண்டும்.
- கிராம ஊராட்சி பகுதிகளிலுள்ள அனைத்து அங்கன்வாடி மையங்களிலும் குழந்தைகள் பயன்படுத்தத் தக்கதான கழிப்பறை (Baby–fiendly Toilet) வசதி உள்ளதை உறுதி செய்தல் வேண்டும்.

- தனி நபர் சுகாதாரம் காத்திடும் பொருட்டு, உணவு உட்கொள்ளும் முன்பும் பின்பும் முறையே கைகளை கழுவி சுத்தம் செய்வதன் அவசியம் குறித்த விழிப்புணர்வை பொது மக்கள் மற்றும் பள்ளிக் குழந்தைகளிடம் ஏற்படுத்திட வேண்டும்.

**பொருள்: 6 பிளாஸ்டிக் பொருட்கள் உற்பத்தி தடைசெய்தல்**

அரசாணை எண். 84 சுற்றுச்சூழல் மற்றும் வனத்துறை, நாள் 25.6.2018–ன் படி ஒரு முறை மட்டும் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் பொருட்களை பயன்படுத்தவும் உற்பத்தி செய்யவும் தடை விதிக்கப்பட்டுள்ளது.

இவ்வாணையின்படி ஒரு முறை மட்டும் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் பொருட்களான பிளாஸ்டிக் பைகள், உணவை பாதுகாக்கவும், மேசைகள் மீது போடவும் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் தாள்கள், பிளாஸ்டிக் தட்டுகள், பிளாஸ்டிக் பூச்சு கொண்ட டீ கப்புகள், பிளாஸ்டிக் தம்ளர், குடிநீர் பாக்கெட்டுகள், பிளாஸ்டிக் உறிஞ்சு குழல்கள், பிளாஸ்டிக் கொடிகள் போன்றவை தயாரித்தல், இருப்பு வைத்தல், விநியோகம், விற்பனை மற்றும் இடமாற்றம் செய்தல் ஆகியன தடைசெய்யப்பட்டுள்ளது.

தமிழ்நாடு அரசு ஆணையின் படி பிளாஸ்டிக் இல்லா மாநிலமாக தமிழ்நாடு உருவாகும் வகையில் அனைவரும் ஒத்துழைக்கவும், மேலும் ஊராட்சியில் செயல்பட்டு வரும் வணிக நிறுவனங்களான டீக்கடை, பெட்டிக்கடை, சிற்றுண்டி உணவகங்கள், மளிகை மற்றும் பல்பொருள் அங்காடிகளில் தடைசெய்யப்பட்ட ஒருமுறை பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் பொருட்களை விற்பனை செய்யாமல் இருக்க வலியுறுத்துவதென தீர்மானித்தல்.

கிராம ஊராட்சியில் தடைசெய்யப்பட்டுள்ள ஒருமுறை பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் பொருட்களை உபயோகப்படுத்துவதை முற்றிலுமாக தவிர்த்து தமிழகத்தை பிளாஸ்டிக் இல்லா மாநிலமாக உருவாக்கிட முழு ஒத்துழைப்பு வழங்கிட தீர்மானித்தல்.

## பொருள் 7 : தூய்மை பாரத இயக்கம் (ஊரகம்)

1. முன் மாதிரி கிராம விருது:

கிராம ஊராட்சி பகுதிகளில், திறந்த வெளியில் மலம் கழித்தலற்ற நிலையை தொடர்ந்து தக்க வைப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ளும் மற்றும் சுத்தம், சுகாதாரம் மற்றும் பசுமை பேணும் கிராம ஊராட்சிகளை ஊக்குவித்து மேலும் சிறப்பாக செயல்படத் தூண்டும் வகையில், கிராம ஊராட்சிகளுக்கென "முன் மாதிரி கிராம விருது" தோற்றுவிக்கப்பட்டுள்ளது.

இவ்விருதிற்கென, ஒரு மாவட்டத்திற்கு ஒரு கிராம ஊராட்சி வீதம் தேர்ந்தெடுக்கப்பட்டு, தலா ரூ.7.50 இலட்சம் ரொக்கப்பரிசும், கேடயமும் வழங்குவது தொடர்பான "முன் மாதிரி கிராம விருது" குறித்த விரிவான வழிகாட்டு நெறிமுறைகள் அடங்கிய அரசாணை எண்.141 ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சி துறை(PR.II), நாள்: 02.12.2021 அன்று வெளியிடப்பட்டுள்ளது. மேலும், மாநில அளவில் சிறப்பாக செயல்படும் மூன்று கிராம ஊராட்சிகள் தேர்வு செய்யப்பட்டு, தலா ரூ.15.00 இலட்சம் ரொக்கப் பரிசுடன், கேடயமும் வழங்கிடவும் இவ்வரசாணையில் உரிய உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளது. எதிர்வரும் ஆகஸ்ட் மாதம் 15ம் தேதி சுதந்திர தின கொண்டாட்டத்தின் போது இவ்விருதுகள் வழங்கப்படும்.

2. தூய்மை பாரத இயக்கம் (ஊரகம்) பகுதி–II (2020–21 முதல் 2024–25 வரை)

தூய்மை பாரத இயக்கம் (ஊரகம்) பகுதி–II–ல் திறந்த வெளியில் மலம் கழித்தலற்ற நிலையினை தக்க வைத்தலுக்கான கூடுதல் நடவடிக்கைகளைப் பற்றி (ODF Plus) தெரிவித்தல்.

i) அனைத்து கிராம ஊராட்சிகளிலும் உள்ள குடும்பங்கள்/ கல்வி நிறுவனங்கள்/ அங்கன்வாடி மையங்கள்/ ஊராட்சியின் பொது இடங்களில் கழிப்பறை வசதிகள் இருப்பதை உறுதி செய்தல் மற்றும் கட்டப்பட்ட கழிப்பறைகளை தொடர்ந்து பயன்பாட்டில் வைத்தல்.

ii) நெகிழிக் கழிவு உட்பட திடக்கழிவு மேலாண்மை நடவடிக்கைகளை முறையாக செயல்படுத்துதல்.

iii) பழுப்பு நீர் மேலாண்மையில் நிறைவுற்ற நிலையினை (Saturation) அடைந்திட தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல்.

iv) மலம் கலந்த கழிவு நீரானது கழிவு நீர் கால்வாய்/ நீர் நிலைகளில் கலக்காமல் தடுத்திட தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல்.

v) கிராமம் முழுவதும் திட மற்றும் திரவக்கழிவு இல்லாமல் பார்வைக்கு தூய்மையாக காட்சியளித்தல்.

3. கழிப்பறை கட்டி பயன்படுத்தும் குடும்பங்களுக்கு பாராட்டு தெரிவித்தல்:

i. கழிப்பறையைக் கட்டி தொடர்ந்து அதனை பயன்படுத்துவதன் மூலம் கிராம ஊராட்சியின் முழு சுகாதாரத்தினை அடையும் முயற்சிக்கு ஒத்துழைப்பு நல்கும் அனைத்து குடும்பங்களுக்கும் பாராட்டு தெரிவித்தல்.

ii. திறந்தவெளியில் மலம் கழித்தல் அற்ற ஊராட்சியாக அறிவிக்கப்பட்ட ஊராட்சிகளில் கட்டப்பட்ட தனி நபர் இல்லக் கழிப்பறைகளை தொடர்ந்து பயன்படுத்தாத நபர்களின் பெயர்களை கிராம சபையில் வாசித்தல் மற்றும் அவர்களை கிராம சுகாதார நலன் மற்றும் குழந்தைகளின் நலன் கருதி கழிப்பறையை பயன்படுத்த வலியுறுத்துதல்.

4. திறந்தவெளியில் மலம் கழித்தலற்ற நிலையை தக்கவைத்தல்:

i. ஊரக பகுதிகளில் உள்ள அனைத்து குடியிருப்புகள், பள்ளிகள், அங்கன்வாடிகள் மற்றும் ஊராட்சியின் பொது இடங்களில் உள்ள கழிப்பறைகளை பயன்பாட்டில் வைத்தல் குறித்து விவாதித்தல்

ii. கிராம ஊராட்சியில் உள்ள அனைத்து வீடுகள், பள்ளிகள், அங்கன்வாடி மையங்கள், நிறுவனங்கள் உள்ளிட்ட அனைத்து இடங்களிலும் கழிப்பறை வசதிகள் இருத்தலை உறுதி செய்தல் மற்றும் தங்கள் கிராம ஊராட்சி திறந்தவெளியில் மலம் கழித்தலற்ற ஊராட்சியாக ஏற்கனவே அறிவித்ததை தொடர்ந்து அந்நிலையை தக்க வைப்பது குறித்து விவாதித்தல்.

iii. தூய்மை பாரத இயக்கம் (ஊரகம்) திட்டம் பகுதி–II–ன் கீழ் எந்தவொரு குடும்பமும் விடுபட்டுவிடக்கூடாது என்ற நோக்கின் அடிப்படையில், ஒன்றிய அரசின் வழிகாட்டுதலின்படி மூலம் 100 சதவீத சுகாதாரத்தினை அடைந்திட வேண்டி விடுபட்ட தகுதியான குடும்பங்களுக்கு கழிப்பறை வசதிகள் ஏற்படுத்தித்தருதல் மற்றும் கழிப்பறை கட்ட இடமில்லாதவர்களை சமுதாய சுகாதார வளாகம் பயன்படுத்த ஊக்குவித்தல்.

iv. ஒருங்கிணைந்த மகளிர் மற்றும் ஆண்கள் சுகாதார வளாகங்கள் மற்றும் சமுதாய சுகாதார வளாகங்கள் பராமரிப்பு மற்றும் அவற்றின் தொடர் செயல்பாடு குறித்து விவாதித்தல். கழிப்பறை கட்ட இடமில்லாமல் உள்ள குடும்பங்களுக்கும் மற்றும் அதிகமாக மக்கள் கூடும் இடங்களிலும் ஊராட்சிக்கு சொந்தமான இடத்தை கண்டறிந்து அவ்விடத்தில் தூய்மை பாரத இயக்கம் (ஊரகம்) மற்றும் 15வது மாநில நிதிக்குழு மானியம் மற்றும் மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதி அளிப்பு திட்ட பங்களிப்புடன் சமுதாய சுகாதார வளாகங்கள் கட்டி கொடுத்தல் குறித்து விவாதித்தல்.

5. திடக்கழிவு மேலாண்மை நடவடிக்கைகள்:

i. தூய்மைக் காவலர்கள் கிராமங்களில் வீடு வீடாகச் சென்று குப்பைகளை சேகரித்து அவற்றை மக்கும் மற்றும் மக்காத குப்பைகளாக தரம் பிரித்து பாதுகாப்பான இடத்தில் கொண்டு சேர்க்கும் பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ளார்கள். பொது மக்கள் தங்கள் வீட்டில் உள்ள குப்பைகளை மக்கும் மற்றும் மக்காத குப்பைகளாக வீட்டிலேயே தரம் பிரித்து தூய்மைக் காவலர்களுக்கு வழங்க ஒத்துழைப்பு அளிப்பது குறித்து விவாதித்தல்.

ii. கிராம ஊராட்சிகளுக்கு திடக்கழிவு மேலாண்மை நடவடிக்கைகளை மேற்கொள்ள ஏற்கனவே அளிக்கப்பட்ட உட்கட்டமைப்பு வசதிகளான தள்ளுவண்டிகள்/ மூன்று சக்கர மிதி வண்டிகள்/ மின்கல வண்டிகள், தெருவில் வைக்கும் குப்பைத் தொட்டிகள், குப்பை பிரிக்கும் கூடம், உரக்குழிகள் ஆகியவற்றை உரிய பயன்பாட்டில் வைத்தல் குறித்து விவாதித்தல்.

iii. அனைத்து கிராம ஊராட்சிகளிலும் மகாத்மா காந்தி தேசிய வேலை உறுதி அளிப்புத் திட்டத்தின் கீழ் அமைக்கப்பட்டுள்ள மண்புழு உரம் தயாரிக்கும் கூடத்தில் முறையாக உரம் தயாரித்திட கிராம வறுமை ஒழிப்புச் சங்க கூட்டமைப்பு அல்லது ஊராட்சி அளவிலான கூட்டமைப்பு மூலம் நடவடிக்கை மேற்கொண்டு உரம் தயாரித்தல், ஊராட்சியில் உள்ள மரக்கன்றுகளுக்கு உரம் பயன்படுத்திடவும் மற்றும் எஞ்சிய உரத்தினை தேவையான தனி நபர்களுக்கு விற்பனை செய்தல் குறித்து விவாதித்தல்.

iv. மாநகராட்சி / நகராட்சிகளுக்கு அருகாமையில் அமைந்துள்ள நகர்புறத் தன்மை கொண்ட மக்கள் தொகை அதிகமுள்ள பெரிய கிராம ஊராட்சிகளில்

அமைக்கப்பட்ட சிறிய அளவிலான உரம் தயாரிக்கும் மையங்களின் (Micro Composing Centres) பயன்பாட்டினை உறுதி செய்தல்.

v. திடக்கழிவு மேலாண்மையில் கிராம ஊராட்சி தன்னிறைவு (Self-sufficient) பெற தேவைப்படும் நடவடிக்கைகள் குறித்து விவாதித்தல்.

6. நெகிழிக்கு மாற்று பொருட்கள் பயன்படுத்துவதை ஊக்குவித்தல் :

தமிழக அரசால் ஒருமுறை பயன்படுத்தக்கூடிய நெகிழி (பிளாஸ்டிக்) பயன்பாடு 01.01.2019 முதற்கொண்டு தடை செய்யப்பட்டுள்ளது. அத்தடையின் செயல்பாட்டை கண்காணிப்பது குறித்தும், நெகிழிக்கு மாற்றுப் பொருட்களை பயன்படுத்துவது தொடர்பாக விழிப்புணர்வு ஏற்படுத்துவதல் குறித்து விவாதித்தல்,

7.நெகிழி மீள வாங்கும் கொள்கையினை அறிமுகப்படுத்துதல்:

நெகிழிப் பொருட்களை சரியான முறையில் மேலாண்மை செய்ப்படாததால் ஏற்படும் மாசுபாட்டை குறைக்கும் வகையில், மகளிர் சுய உதவிக்குழுக்களின் மூலம் தன்னிறைவு பெற்று நீடித்து செயல்பட கூடிய 'நெகிழி அரவை இயந்திரம்' சில வட்டாரங்களில் செயல்பாட்டிற்குக் கொண்டு வரப்பட்டுள்ளது. இதிலிருந்து வரும் அரைக்கப்பட்ட நெகிழித் துகள்கள் சாலைப் பணிகளுக்கு வழங்கப்பட்டு வருகிறது. தமிழக அரசின் "மீண்டும் மஞ்சப்பை" முன்னெடுப்பின் ஒரு பகுதியாக, பொது மக்களிடமிருந்து நெகிழிப் பொருட்களை மீள வாங்கும் கொள்கையினை (Plastic Buy Back Policy) தங்கள் கிராமங்களில் அறிமுகம் செய்தல்.

8. திரவக் கழிவு மேலாண்மை நடவடிக்கைகள்:

i. ஊராட்சி பகுதிகளில் அமைந்துள்ள நீர் நிலைகள்/ஆற்றுபடுக்கைகளில் கழிவு நீர் கலத்தல் மற்றும் குப்பைகள் கொட்டப்படுவதன் மூலம் நீர்நிலை மாசுபடுவதை தடுப்பது குறித்து விவாதித்தல்.

ii. ஊரக குடியிருப்புகள்/நிறுவனங்கள் மற்றும் பொது இடங்களில் இருந்து வெளியேறும் பழுப்பு நீர், சாலைகள் மற்றும் தெருக்களில் தேங்காமல் உறிஞ்சுக்குழிகள், கிடைமட்ட/செங்குத்து வடிகட்டிகள், கழிவுநீர் கால்வாய்கள் அமைப்பதன் மூலம் திறம்பட கையாளுதல் குறித்து விவாதித்தல்.

பொருள் 8: விரிவான கிராம சுகாதார திட்டத்தைப் பற்றி விவாதித்தல்

திறந்தவெளியில் மலம் கழித்தலற்ற நிலையை தொடர்ந்து தக்கவைப்பதுடன், ஊரக பகுதிகளில் ஆங்காங்கே குப்பைகள் இல்லாத நிலை மற்றும் கழிவுநீர் தேங்காத வகையில் திட மற்றும் திரவ கழிவு மேலாண்மை போன்ற கூடுதல் நடவடிக்கைகளை மேற்கொள்ள ஊராட்சி அளவில் விரிவான கிராம சுகாதார திட்டத்தை உருவாக்குதல் பற்றி விவாதித்தல்.

பொருள் 9 : ஜல் ஜீவன் திட்டம்

உலக தண்ணீர் தினத்தினை முன்னிட்டு 22, மார்ச் 2022 அன்று 33 மாவட்டங்களில் 1283 ஊராட்சிகளில் "100 சதவிகிதம் அனைத்து வீடுகளுக்கும் குடிநீர் குழாய் இணைப்பு வழங்கப்பட்ட ஊராட்சி " என சிறப்பு கிராம சபை கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்ற கேட்டுகொள்ளபட்டு, 719 ஊராட்சிகளில் மட்டும் 100 சதவிகிதம் அனைத்து வீடுகளுக்கும் குடிநீர் குழாய் இணைப்பு வழங்கப்பட்ட ஊராட்சி " என தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மேற்குறிபிட்டுள்ள சிறப்பு கிராம சபையில் விடுபட்டுள்ள இதர ஊராட்சிகளில் 100 சதவிகிதம் அனைத்து வீடுகளுக்கும் குடிநீர் குழாய் இணைப்பு வழங்கப்பட்ட ஊராட்சி " என தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும்.

பொருள் 10 : வேளாண்மை – உழவர் நலத்துறை

I. வேளாண்மை – உழவர் நலத் துறையின் கட்டுப்பாட்டிலுள்ள அனைத்து திட்டங்கள் தொடர்பான விவரங்கள் கிராம சபைக் கூட்டங்களில் பங்கேற்கும் கிராம பொதுமக்கள் மற்றும் விவசாயிகள் உள்ளிட்ட அனைத்து திட்டப் பயனாளிகளும் தெரிந்து கொள்ளும் வகையில் சம்பந்தப்பட்ட துறை அலுவலர்கள் மூலமாக மாவட்ட அலுவலர்களால் எடுத்துரைக்கப்பட வேண்டும். கிராம சபைக் கூட்டங்களின் போது இது தொடர்பான விளக்கப் பதாகைகள் தொடர்புடைய வேளாண்மை–உழவர் நலத்துறை மூலம் நிறுவிடவும் நடவடிக்கை எடுத்தல்.

II. வேளாண்மை – உழவர் நலத் துறையின் மூலம் செயல்படுத்தப்படும் அனைத்து திட்டஙகளின் கீழான பயனாளிகளின் பட்டியல்களை கிராம பொது மக்கள், விவசாயிகள் மற்றும் அனைத்து தரப்பினரின் பார்வைக்காக வேளாண்மை – உழவர் நலத் துறையின் மாவட்ட அளவிலான அலுவலர்களால் கிராம சபை

கூட்டம் நடைபெறும் அந்தந்த கிராமங்களில் வைத்தல் மற்றும் இதன் வாயிலாக திட்டங்களின் செயல்பாட்டில் வெளிப்படைத் தன்மையை உறுதி செய்தல்.

**பொருள் 11 : நமக்கு நாமே திட்டம்**

**(பொது மக்கள் அறிந்து கொள்வதற்காக)**

சமூகத்தின் சுய உதவி, சுயசார்பு எண்ணம் ஆகியவற்றினை வலிமைப்படுத்தவும், ஊக்குவிக்கவும் மக்களின் பங்களிப்புடன் பொது சொத்துக்களை உருவாக்கிடும் வகையில் நமக்கு நாமே திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

இத்திட்டத்தின் கீழ், தனிநபர்களோ, குழுக்களோ, நிறுவனங்களோ, தனியார் அமைப்புகளோ அல்லது பொது மக்களோ, தேவையின் அடிப்படையில் பணிகளை தேர்வு செய்து மதிப்பீட்டுத் தொகையில் மூன்றில் ஒரு பகுதியை வங்கி வரைவோலையாக மாவட்ட ஆட்சியரிடம் வழங்க வேண்டும். மதிப்பீட்டுத் தொகையில் 50 விழுக்காடு அல்லது அதற்கு அதிகமான பங்களிப்புத் தொகை வழங்கினால் ஒப்பந்தப்புள்ளியின்றி பங்களித்தவரையோ அல்லது அவரது முகவரையோ பணி மேற்கொள்ள மாவட்ட ஆட்சியரால் அனுமதி வழங்கப்படும்.

2021–22 ஆம் ஆண்டில் நமக்கு நாமே திட்டத்தினை செயல்படுத்தும் வகையில் அரசாணை எண்.147, ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறை (SGS–1) துறை, நாள்.14.12.2021–ன் வாயிலாக ரூ.100 கோடி ஒதுக்கீடு செய்து இத்திட்ட செயல்பாடு தொடர்பான விரிவான வழிகாட்டி நெறிமுறைகளையும் அரசு வெளியிட்டுள்ளது.

மேலும், பட்டியல் இனத்தவர்/பழங்குடியினர் குடியிருப்பு பகுதிகளில் அதிக அளவிலான பணிகள் மேற்கொள்வதற்கு ஏதுவாக, அரசாணை எண்.24 ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறை,(SGS–1) துறை, நாள்.08.03.2022–ன் வாயிலாக, பட்டியல் இனத்தவர்/பழங்குடியினர் குடியிருப்புப் பகுதிகளில் பணிகள் மேற்கொள்ள குறைந்தபட்ச பொது மக்கள் பங்களிப்புத் தொகையினை மதிப்பீட்டுத் தொகையில் மூன்றில் ஒரு பங்கிலிருந்து ஐந்தில் ஒரு பங்காகத் தளர்த்தியும் அரசு

உத்தரவிட்டுள்ளது. மேலும் இப்பகுதிகளில் மதிப்பீட்டுத் தொகையில் மூன்றில் ஒரு பங்கு தொகையை பங்களிப்புத் தொகையாக வழங்கினால் பங்களித்தவரையோ அல்லது அவரது முகவரையோ ஒப்பந்தப்புள்ளியின்றி பணிகள் மேற்கொள்ள மாவட்ட ஆட்சியரால் அனுமதிக்கப்படும்.

**பொருள் 12: மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதித் திட்டம்**

I. அனைத்து கிராம அண்ணா மறுமலர்ச்சி திட்டம் – II 2021–22 மற்றும் 2022–23 ஆகிய ஆண்டுகளில் ஊராட்சிகள் தேர்வு செய்யப்பட்டுள்ள பணிகள் முறையே கிராம சபை கூட்டத்தில் வைத்து ஒப்புதல் பெறப்பட வேண்டும்.

II. மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதித் திட்டத்தில் வரப்பெறும் புகார்கள் மற்றும் கோரிக்கைகளுக்கு தீர்வுகாண மாவட்ட அளவில் திரு./திருமதி. ........................................தொலைபேசி எண் ........................ மற்றும் மின்னஞ்சல் முகவரி ........................................ என்பவர் நியமிக்கப்பட்டுள்ள விவரம் கிராம சபை கூட்டத்தில் பார்வைக்கு வைக்கப்பட வேண்டும்.

ஒம்/– பிரவீன் பி. நாயர்
இயக்குநர்

இயக்குநருக்காக

மேலும், 01.05.2022 அன்று நடைபெறவுள்ள கிராம சபைக் கூட்டம் அனைத்து கிராம ஊராட்சிகளிலும் நடைபெற உரிய நடவடிக்கை எடுத்திடவும், கூட்டம் தொடர்பான அறிக்கையினை இவ்வியக்ககத்திற்கு 09.05.2022 க்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

இணைப்பு: கிராம சபைக் கூட்டப் பொருள்கள்.

ஒம்/– பிரவீன் பி. நாயர்
இயக்குநர்

G. Yd
இயக்குநருக்காக

20/4/22

நகல்–

1. அரசு முதன்மைச் செயலர்,
ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறை,
தலைமைச் செயலகம், சென்னை– 9.

2. மேலாண்மை இயக்குநர்,
தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டு நிறுவனம், சென்னை–35.

3. திட்ட இயக்குநர்,
மாவட்ட ஊரக வளர்ச்சி முகமை,
அனைத்து மாவட்டங்கள்.

4. உதவி இயக்குநர் (ஊராட்சிகள்),
அனைத்து மாவட்டங்கள்.

அனுப்புநர்
பிரவீன் பி.நாயர், இ.ஆ.ப.,
இயக்குநர்,
ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சி இயக்ககம்,
பனகல் மாளிகை, சைதாப்பேட்டை,
சென்னை– 15.

பெறுநர்
மாவட்ட ஆட்சித் தலைவர்,
அனைத்து மாவட்டங்கள்
(சென்னை நீங்கலாக)

ந.க.எண். 73232/2021/ஊராட்சி .2.3, நாள்: 27.04.2022

அய்யா/அம்மையீர்,

பொருள்: கிராம சபா கூட்டம் – ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சி துறை – 01.05.2022 **தொழிலாளர் தினம் அன்று கிராம சபை கூட்டம் நடத்துதல்** – கூடுதல் அறிவுரைகள் மற்றும் கூடுதல் கூட்டப் பொருள்கள் அனுப்புதல் –தொடர்பாக.

பார்வை:
1) அரசாணை (நிலை) எண்.245, ஊ.வ.(சி1) துறை, நாள் 19.11.1998.
2) அரசாணை (நிலை) எண்.130, ஊரகவளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறைநாள் 25.9.2006
3) இவ்வியக்கக ந.க.எண்73232/2021/ஊராட்சி .2.3, நாள்: 19.04.2022

---------

பார்வை 3–ல் காணும் இவ்வியக்கக கடிதத்தின் மீது தங்களின் கவனம் ஈர்க்கப்படுகிறது. அதில் **01.05.2022 தொழிலாளர் தினம்** அன்று காலை 11.00 மணியளவில் நடைபெறயிருந்த கிராம சபைக் கூட்டத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டிய பொருள் விவரங்கள் இணைத்தனுப்பப்பட்டது. தற்போது அதன் தொடர்ச்சியாக **01.05.2022 தொழிலாளர் தினம்** அன்று கிராம சபைக் கூட்டத்தினை கோடை வெயில் தாக்கத்தின் காரணமாக **காலை 10.00 மணியளவில்** நடத்தப்பட வேண்டும் எனவும், மேலும் அரசின் பல்வேறு திட்டப் பணிகளின் கீழ் பயன்பெறும் பயனாளிகளின் பட்டியல் மற்றும் மத்திய மாநில அரசால் நடைபெறும் பல்வேறு வளர்ச்சி திட்டங்கள், ஊராட்சியால் ஒப்புதல் அளிக்கப்பட்ட பணிகள் தொடர்பாக கிராம சபை கூட்டத்திற்கு முன்னர் வைக்கப்படுவதற்கு கீழ்கண்ட அறிவுரைகள் வழங்கப்படுகிறது.

கிராம ஊராட்சி நிர்வாகம் மற்றும் பொதுநிதியின் கீழ் கடந்த அக்டோபர் 2021 முதல் ஏப்ரல் 2022 முடியவுள்ள காலத்தில் மேற்கொள்ளப்பட்ட பணிகளின் விவரங்கள் தலைப்பு வாரியாக இணைக்கப்பட்டுள்ள கூட்டப் பொருள் படிவத்தில் பதிவு செய்து கிராம சபையில் படித்து காண்பித்து ஒப்புதல் பெறப்பட வேண்டும் எனத் தெரிவிக்கப்பட்டிருந்தது. எனினும் ஏப்ரல் 2021 முதல் மார்ச் 2022 வரை மேலும் ஏப்ரல்

2022 மாதத்தில் மேற்கொள்ளப்பட்ட பணிகளின் விவரம், வரவு செலவு விவரங்களை கிராம சபையில் வைத்து ஒப்புதல் பெற வேண்டும்.

கடந்த 2021-22 ஆண்டில் மேற்கொள்ளப்பட்ட அனைத்து திட்டங்களுக்கான வரவு செலவு அறிக்கை, மேலும் அனைத்து திட்டங்களின் கீழ் பயனடைந்த பயனாளிகளின் விவரம் மற்றும் பணிகளின் முன்னேற்ற விவரங்கள் அடங்கிய முழு அறிக்கை கிராம சபை நடப்பதற்கு முன்னதாக 29.04.2022 மற்றும் 30.04.2022 ஆகிய நாட்களில் ஒவ்வொரு கிராம ஊராட்சியில் உள்ள ஊராட்சி மன்ற அலுவலக தகவல் பலகையில் பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்படுவது உறுதி செய்ய வேண்டும். இந்த தகவலினை ப்ளக்ஸ் பேனேர்கள் மூலமும் பொதுமக்கள் பார்த்து அறியும் வண்ணம் பொருத்திட வேண்டும். மேலும், 2022-23-ம் ஆண்டிற்கு தேர்வு செய்யப்பட்ட பணிகளின் விவரம் மற்றும் பயனாளிகள் விவரம் அனைத்தும் கிராமசபையில் பொதுமக்கள் முன்னிலையில் படித்துக் காண்பித்து ஒப்புதல் பெறுவது உறுதி செய்யப்பட வேண்டும்.

மேலும் கிராம ஊராட்சியில் 2021-22 ஆம் ஆண்டில் மேற்கொள்ளப்பட்ட அனைத்து வரவு செலவு விவரங்கள் அடங்கிய சுருக்கத்தினை (படிவம் 30 ) கிராம சபையில் பங்கேற்கும் பொது மக்கள் ஒவ்வொருவருக்கும் வழங்கப்பட வேண்டும்.

மேற்கண்ட அறிவுரைகள் மற்றும் வழிகாட்டு நெறிமுறைகளை முழுமையாக பின்பற்றி வரும் மே 1 அன்று நடைபெறும் கிராம சபைக் கூட்டத்தினை சிறப்பாக நடத்திட தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

இணைப்பு: கூடுதல் கூட்டப் பொருள்கள்.

27/04/22

இயக்குநர்

27/04/22

நகல்:

1. அரசு முதன்மைச் செயலர்,
   ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறை,
   தலைமைச் செயலகம், சென்னை- 9.
2. மேலாண்மை இயக்குநர்,
   தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டு நிறுவனம், சென்னை-35.
3. திட்ட இயக்குநர்,
   மாவட்ட ஊரக வளர்ச்சி முகமை,
   அனைத்து மாவட்டங்கள்.
4. உதவி இயக்குநர் (ஊராட்சிகள்),
   அனைத்து மாவட்டங்கள்.

**01. 05.2022 தொழிலாளர் தினம் அன்று கிராம சபா கூட்டத்தில் விவாதிக்க வேண்டிய கூட்டப் பொருள்கள் விவரம்**

**பொருள்: 1 கிராம ஊராட்சி நிர்வாகம் மற்றும் பொது நிதி செலவினம் குறித்து விரிவாக விவாதித்தல்**

கிராம ஊராட்சிகளில், ஏப்ரல் 2021 முதல் ஏப்ரல் 2022 முடியவுள்ள காலத்தில் கிராம ஊராட்சியின் பொது நிதியில் இருந்து கீழ்க்கண்ட தலைப்புகளில் மேற்கொண்ட செலவின அறிக்கை மற்றும் இதர விவரங்களை கிராம சபையின் ஒப்புதலுக்கு வைக்கப்படுகிறது.

i. குடிநீர் வசதிக்கான செலவினங்கள் கைப்பம்பு –, விசைப்பம்பு மற்றும் மேல்நிலை நீர்த் தேக்கத் தொட்டிகள் பராமரிப்புச் செலவின விவரங்கள்.

ii. மின்சார வசதிக்கான செலவினங்கள்

iii. பொது நிதியில் எடுக்கப்பட்ட மூலதனப் பணிகள் அதன் முன்னேற்றம் மற்றும் நிதி செலவின விபரம்

iv. இதர நிர்வாக செலவினங்கள் விபரம்.

| **1.குடிநீர் பணிகள்** | | | | |
|---|---|---|---|---|
| வ.எண் | மாதம் | பணியின் விவரம் | பணியின் தற்போதைய நிலை | செலவினத் தொகை (ரூபாயில்) |
| | | | | |
| | | | | |

| **2.மின்சார பணிகள்** | | | | |
|---|---|---|---|---|
| வ.எண் | மாதம் | பணியின் விவரம் | பணியின் தற்போதைய நிலை | செலவினத் தொகை (ரூபாயில்) |
| | | | | |
| | | | | |

| 3.மூலதனப் பணிகள் | | | | |
|---|---|---|---|---|
| வ.எண் | மாதம் | பணியின் விவரம் | பணியின் தற்போதைய நிலை | செலவினத் தொகை (ரூபாயில்) |
| | | | | |
| | | | | |

| 4.இதர நிர்வாக செலவினங்கள் | | | |
|---|---|---|---|
| வ.எண் | மாதம் | செலவின விவரம் | செலவினத் தொகை (ரூபாயில்) |
| | | | |
| | | | |

**பொருள் : 2 ஊராட்சிப் பகுதிகளில் நடைபெற்று வரும் பல்வேறு திட்டப் பணிகளின் முன்னேற்றம் மற்றும் நிதி செலவின விபரங்கள் குறித்து விரிவான விவாதம்**

நடப்பு நிதியாண்டில் (2022 –23) ஊராட்சிப் பகுதியில் நடைபெறும் ஒன்றிய அரசு மற்றும் மாநில அரசு நிதியில் நடைபெற்று வரும் பல்வேறு வளர்ச்சித் திட்டப் பணிகளின் முன்னேற்றம் மற்றும் நிதி செலவினம் குறித்து பொது மக்களுக்கு தெரிவிக்கப்படுகிறது.

**1. ஒன்றிய அரசுத் திட்டங்கள்**

| வ.எண் | பணிகளின் விவரம் | மதிப்பீடு | பணியின் தற்போதைய நிலை | செலவினத் தொகை (ரூபாயில்) |
|---|---|---|---|---|
| | | | | |
| | | | | |

**2. மாநில அரசுத் திட்டங்கள்**

| வ.எண் | பணிகளின் விவரம் | மதிப்பீடு | பணியின் தற்போதைய நிலை | செலவினத் தொகை (ரூபாயில்) |
|---|---|---|---|---|
| | | | | |

**பொருள் 3 : அனைத்து கிராம அண்ணா மறுமலர்ச்சி திட்டம் – II**

அனைத்து கிராம அண்ணா மறுமலர்ச்சி திட்டம் – II 2021–22 மற்றும் 2022–23 ஆகிய ஆண்டுகளில் ஊராட்சிகள் தேர்வு செய்யப்பட்டுள்ள பணிகள் விவரம் கிராம சபை கூட்டத்தில் ஒப்புதலுக்கு வைக்கப்படுகிறது.

**2021–22**

| **வ.எண்.** | **பணிகளின் விவரம்** | **மதிப்பீடு** | **தற்போதைய நிலை** | **செலவினத் தொகை (ரூபாயில்)** |
|---|---|---|---|---|
| | | | | |
| | | | | |

**2022–23**

| **வ.எண்.** | **தேர்வு செய்யப்பட்ட பணிகளின் விவரம்** | **மதிப்பீடு (ரூபாயில்)** |
|---|---|---|
| | | |
| | | |

**பொருள் 4 : மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதி திட்டம்**

1. **மாவட்ட அளவிலான புகார் மையம்**

 மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதித் திட்டத்தில் வரப்பெறும் புகார்கள் மற்றும் கோரிக்கைகளுக்கு தீர்வுகாண மாவட்ட அளவில் திரு./திருமதி. ……………………………………………..,………தொலைபேசி எண் ……………………………………….. மற்றும் மின்னஞ்சல் முகவரி ……………………………………………… என்பவர் நியமிக்கப்பட்டுள்ள விவரம் கிராம சபை கூட்டத்தில் பார்வைக்கு வைக்கப்படுகிறது.

2. 2022–23 ம் ஆண்டுக்கான, தொழிலாளர் வரவு–செலவு திட்டத்தினை, ஏப்ரல் 30ம் தேதி வரையிலான முன்னேற்ற அறிக்கை மற்றும் மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதி திட்டத்தில் சாத்தியமான பணிகள் குறித்த விவரங்கள் தெரிவிக்கப்படுகிறது.

| **அங்கீகரிக்கப்பட்ட மனித சக்திநாட்கள்** | **30.04.2022 வரை உருவாக்கப்பட்ட மனித சக்திநாட்கள்** | **சதவிகிதம் %** |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| | | |
| | | |

| வ. எண் | 2021-22 (30.04.2022 வரை) | | 2022-23 (30.04.2022 வரை) | |
|---|---|---|---|---|
| | நாட்கள் | செலவினம் | நாட்கள் | செலவினம் |
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | | | | |

3. தற்போது உள்ள பணிகளின் தொகுப்பின் (Shelf of Project) முன்னேற்றம் தெரிவிக்கப்படுகிறது.

| வ. எண். | பணியின் பெயர் | குறியீடு எண். | அனுமதிக்கப்பட்ட தொகை (ரூபாயில்) | | | செலவினம் (ரூபாயில்) | | | கால அளவு | பணியின் நிலை முடிவுற்றது/ முடிவுறாதது |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | ஊதியம் | பொருட்கிரயம் | மொத்தம் | ஊதியம் | பொருட்கிரயம் | மொத்தம் | | |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) |
| | | | | | | | | | | |

**4.** 2021-22-ம் ஆண்டில் தேர்வு செய்யப்பட்ட பணிகளின் முன்னேற்ற நிலை குறித்து விவாதித்தல்.

**5.** 2022-23-ம் ஆண்டில் புதிதாக தேர்வு செய்யப்பட்ட பணிகள் மற்றும் வேலை வழங்குவதற்கான தொழிலாளர் மதிப்பீடு (Labour Budget) இறுதி செய்யப்பட்டதற்கான பணிகவிக்கப்படுகிறதுளின் விவரம் தெரி.

**6. 2022-23-ம் ஆம் ஆண்டு மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதி திட்ட பணிகளின் விவரம்**

**<u>படிவம்-1 பணிகளின் சுருக்கம்</u>**

**மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதி சட்ட பணிகளில் இயற்கை வள மேலாண்மை பணிகள் (65%) மற்றும் விவசாயம் தொடர்புடைய பணிகள் (60%)**

மாவட்டம்:

ஊராட்சி:

வட்டாரம்:

| வ எண். | மத்திய அரசால் வரையறுக்கப்பட்ட பணிகள் | செய்யப்படவேண்டிய பணிகளின் வகை | பணிகளின் எண்ணிக்கை | மதிப்பீட்டுத் தொகை (ரூ இலட்சத்தில்) | மனித சக்தி நாட்கள் |
|---|---|---|---|---|---|
| **பொதுப் பணிகள்** | | | | | |
| 1 | குளங்கள் / ஏரிகள் உள்ளிட்ட பராம்பரிய நீராதார அமைப்புகளைப் | | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | புனரமைத்தல் (Renovation of traditional water bodies) | | | | |
| 2 | நீராதாரங்களைப் பாதுகாத்தல் மற்றும் நீர் சேகரிப்புப் பணிகள் (Water conservation and Water Harvesting) | (அ) கல் தடுப்பணை (Check Dams) | | | |
| | | (ஆ) நிலத்தடி அணைக்கரை (Underground dyke) | | | |
| | | (இ) மண் அணை (Earthern Dam) | | | |
| | | (ஈ) தடுப்பணை மற்றும் நீரூற்று ஆதாரப்பணிகள் (Stop Dam & Percolation tanks) | | | |
| 3 | இயற்கை வள மேலாண்மை பணிகள் (Natural Resource Management) | (அ) மரக்கன்றுகள் நடுதல் (Plantation) | | | |
| | | (ஆ) நில மேம்பாட்டுப் பணிகள் (Land Development works) | | | |
| | | (இ) தோட்டக்கலை சார்ந்த பணிகள் (Horticulture plantation) | | | |
| | | (ஈ) கடற்கரை பகுதிகளில் வளரக்கூடிய மரங்களை நடுதல் (Plantation in coastal areas) | | | |
| | | (உ) உறிஞ்சு குட்டை மற்றும் ஊறும் குட்டைகள் அமைத்தல் (Recharge Structures) | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 4 | ஒருங்கிணைந்த நீர்வடிப்பகுதி மேலாண்மை திட்டப் பணிகள் (Water shed Development and Management works) | (அ) பண்ணைக்குட்டைகள் அமைத்தல் (Farm ponds) | | | |
| | | (ஆ) மரக்கன்றுகள் நடுதல் (Plantation) | | | |
| | | (இ) ஆழப்படுத்துதல் (Deepening) | | | |
| | | (ஈ) மண் அணை (Earthern Dam) | | | |
| | | (உ) தடுப்பணை (Stop Dam) | | | |
| 5 | சிறு மற்றும் குறு நீர்ப்பாசன | | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | கால்வாய்களை உருவாக்குதல், சீராக்குதல் மற்றும் பராமரித்தல் (Micro & Minor irrigation works and creation, renovation of irrigation canals & drains ) | | | | |
| 6 | பொது நிலங்களில் நில மேம்பாட்டு பணிகள். (Land Development works in common lands) | | | | |
| 7 | நீராதார மேலாண்மைப் பணிகள் (Water shed Development works) | (அ) கல் கட்டமைப்பு அணைகள் (Check Dam) | | | |
| | | (ஆ) சம அளவு அகழிகள் (Contour trenches) | | | |
| | | (இ) பாராங்கல் கொண்டு நீரோடையில் தடுப்பு ஏற்படுத்துதல் (Boulder checks) | | | |
| | | (ஈ) பாராங்கல் மற்றும் கம்பி வலை கொண்டு தடுப்பு (Gabion structures) | | | |
| | | (உ) நீருற்று ஆதாரப்பணிகள் (percolation tanks) | | | |
| **தனி நபர் பணிகள்: (தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர், சிறு மற்றும் குறு விவசாயிகள்)** | | | | | |
| 8 | நீர்பாசன பணிகள்: (Irrigations works) | (அ) கிணறு தோண்டுதல் (Dug Wells) | | | |
| | | (ஆ) பண்ணைக் குட்டைகள் அமைத்தல் (Farm Ponds) | | | |
| | | (இ) இதர நில மேம்பாட்டுப் பணிகள் (Other Land Development works) | | | |
| 9 | வாழ்வாதார பணிகள்: (Livelihood works) | (அ) தோட்டக்கலை (Horticulture) | | | |
| | | (ஆ) பட்டுவளர்ப்பு (Sericulture) | | | |
| | | (இ) மரக்கன்றுகள் நடுதல் | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | (Plantation) | | | |
| | | (ஈ) பண்ணைக் காடுகள் அமைத்தல் (Farm Plantation) | | | |
| 10 | தரிசு நிலம் அல்லது பயனற்ற நிலங்களை மேம்படுத்தி விவசாய நிலங்களாக மாற்றுதல். Land Development Activities (Development of fallow or waste lands) | | | | |
| 11 | மண் அரிப்பினைத் தடுத்து மண் ஈரத்தினை மேம்படுத்தும் வகையில் பகுதி வரப்புகள் அமைத்தல். (Compartmental Bunding / Farm bunding) | | | | |

**40% மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலை உறுதி சட்ட இதர பணிகள்**

| வ. எ ண். | மத்திய அரசால் வரையறுக்கப்பட்ட பணிகள் | பதிவு செய்யப்படவேண்டிய பணிகளின் வகை | பணிகளின் எண்ணிக் கை | மதிப்பீட்டுத் தொகை (ரூ. இலட்சத்தில் ) | மனித சக்தி நாட்க ள் |
|---|---|---|---|---|---|
| 1 | தனி நபர் உட்கட்டமைப்பு வசதிகள். (Individual infrastructure facilities) | (அ) மாட்டு கொட்டகை (Cattle Shelter) | | | |
| | | (ஆ) ஆட்டு கொட்டகை (Goat Shelter) | | | |
| 2. | ஊரக சுகாதார பணிகள்: (Rural Sanitation works) | தனி நபர் இல்ல கழிப்பிடம் (Individual House Hold Latrine for Rural Hiring 10 mandays) | | | |
| 3. | ஊரக இணைப்பு சாலை பணிகள் (Rural connectivity) | சாலைகள் அமைத்தல் | | | |
| 4. | கட்டிட பணிகள் (Building works) | அ) அங்கன்வாடி மைய கட்டிடம் (Anganwadi Centre Buildings) | | | |
| | | ஆ) அறுவடைக்குப் பின்னர் தேவைப்படும் வசதிகளான சேமிப்பு வசதிகளை உருவாக்குதல். (Food grain Godown) | | | |
| 5. | இதர (Others) | | | | |
| | **பெரு மொத்தம்** | | | | |

**பொருள்: 5 சுகாதாரம் (பள்ளி கழிப்பறைகள் மற்றும் அங்கன்வாடி மையக் கழிப்பறைகள்):**

i. கிராம ஊராட்சியில் உள்ள பள்ளிகள் மற்றும் அங்கன்வாடி மையக் கழிப்பறைகள் பயன்பாடு மற்றும் பராமரிப்பு.

ii. துப்புரவுப் பணியாளர்கள் பள்ளிகளில் உள்ள கழிப்பறைகளை ஒவ்வொரு நாளும் இரண்டு முறை சுத்தம் செய்தல், பள்ளி துவங்கும் முன்பு வகுப்பறைகளை தூய்மைபடுத்துதல், பள்ளி வளாகத்தினை வாரம் ஒரு முறை தூய்மைபடுத்துதல், கழிப்பறைகளில் தண்ணீர் வசதிகள் ஏற்படுத்தியது குறித்து விவாதிப்பதற்கு வைக்கப்படுகிறது.

| வ.எண். | அங்கன்வாடி / பள்ளிகள் விவரம் | கழிப்பறை உள்ள விவரம் | குடிதண்ணீர் விவரம் |
|---|---|---|---|
| | | | |
| | | | |

**பொருள்: 6 ஊட்டச்சத்து இயக்கம்(POSHAN Abhiyaan)**

பெண்கள் மற்றும் குழந்தைகளின் ஆரோக்கியம் மற்றும் தனிநபர் சுகாதாரத்தினை மேம்படுத்திடும் வகையில் ஊட்டச்சத்து இயக்கத்தில் **(POSHAN Abhiyaan)** கிராமப்புற மக்களை பங்கு பெறச் செய்வதைப் பற்றி அங்கன்வாடி பணியாளர் பொது மக்களுக்கு தெரிவிக்கப்பட்டது

**பொருள்: 7 பிளாஸ்டிக் பொருட்கள் உற்பத்தி தடைசெய்தல்**

கிராம ஊராட்சியில் தடைசெய்யப்பட்டுள்ள ஒருமுறை பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் பொருட்களை உபயோகப்படுத்துவதை முற்றிலுமாக தவிர்த்து ஒத்துழைப்பு வழங்கிட வேண்டும்.

பிளாஸ்டிக் பைகள், மேஜைமீது பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக் தாள்கள், பிளாஸ்டிக் தட்டுகள், பிளாஸ்டிக் பூச்சு கொண்ட டீ கப்புகள், பிளாஸ்டிக் தம்ளர், குடிநீர் பாக்கெட்டுகள், பிளாஸ்டிக் உறிஞ்சிக் குழாய்கள், பிளாஸ்டிக் கொடிகள் போன்றவற்றை பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும்.

பிளாஸ்டிக் பொருட்களுக்கு மாற்றுப் பொருட்களாக, துணி மற்றும் பாத்திரங்களை பயன்படுத்திட வேண்டும். பாக்கு மட்டைத் தட்டுகள், இலைகள், மந்தாரை இலை, துணியால் ஆன கொடிகள், மூங்களில் பொருட்கள் போன்றவற்றைப் பயன்படுத்த வேண்டும் என்று பொதுமக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தப்பட்டது.

**பொருள் 8: (தூய்மை பாரத இயக்கம் (ஊரகம்))**

1. **முன் மாதிரி கிராம விருது:**

கிராம ஊராட்சி பகுதிகளில், திறந்த வெளியில் மலம் கழிப்பதை தவிர்த்தல் மற்றும் சுத்தம், சுகாதாரம் மற்றும் பசுமை பேணும் கிராம ஊராட்சிகளை ஊக்குவிக்கும் "முன் மாதிரி கிராம விருது" வழங்கப்பட உள்ளது.

இவ்விருதிற்கென, ஒரு மாவட்டத்திற்கு ஒரு கிராம ஊராட்சி வீதம் தேர்ந்தெடுக்கப்பட்டு, தலா ரூ.7.50 இலட்சம் ரொக்கப்பரிசும், கேடயமும் எதிர்வரும் ஆகஸ்ட் மாதம் 15ம் தேதி சுதந்திர தின கொண்டாட்டத்தின் போது இவ்விருதுகள் வழங்கப்படும். எனவே, நமது ஊராட்சி இவ்விருதினை பெறும் வகையில் அனைவரும் ஒத்துழைப்பு வழங்க வேண்டும்.

2. **திடக்கழிவு மேலாண்மை நடவடிக்கைகள்:**

   i. உங்கள் வீடுகளில் சேகரமாகும் குப்பைகளை மக்கும் மற்றும் மக்காத குப்பைகளாக தரம் பிரித்து தூய்மை காவலர்களிடம் வழங்க வேண்டும்.

   ii. அனைத்து கிராம ஊராட்சிகளிலும் மகாத்மா காந்தி தேசிய வேலை உறுதி அளிப்புத் திட்டத்தின் கீழ் அமைக்கப்பட்டுள்ள மண்புழு உரம் தயாரிக்கும் கூடத்தில் முறையாக உரம் தயாரித்து ஊராட்சியில் உள்ள மரக்கன்றுகளுக்கு உரமாக பயன்படுத்திடவும் மற்றும் எஞ்சிய உரத்தினை தேவையான தனி நபர்களுக்கு விற்பனை செய்ய உள்ளதால், அதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

3. **நெகிழி மீள வாங்கும் கொள்கையினை அறிமுகப்படுத்துதல்:**

தமிழக அரசின் "மீண்டும் மஞ்சப்பை" முன்னெடுப்பின் ஒரு பகுதியாக, பொது மக்களிடமிருந்து நெகிழிப் பொருட்களை மீள வாங்கும் கொள்கையினை (Plastic Buy Back Policy) அறிமுகப்படுத்தப்படுகிறது. எனவே, நெகிழி பொருட்களை ஊராட்சியிடம் ஒப்படைத்து உரிய தொகையை பெற்றுக்கொள்ளலாம்.

4. **திரவக் கழிவு மேலாண்மை நடவடிக்கைகள்:**

   i. ஊராட்சி பகுதிகளில் அமைந்துள்ள நீர் நிலைகள்/ஆற்றுபடுக்கைகளில் கழிவு நீர் கலத்தல் மற்றும் குப்பைகள் கொட்டப்படுவதன் மூலம் நீர்நிலை மாசுபடுவதை தடுத்திட வேண்டும்.

ii. ஊரக குடியிருப்புகள்/நிறுவனங்கள் மற்றும் பொது இடங்களில் இருந்து வெளியேறும் பழுப்பு நீர், சாலைகள் மற்றும் தெருக்களில் தேங்காமல் உறிஞ்சுக்குழிகள், கிடைமட்ட/செங்குத்து வடிகட்டிகள், கழிவுநீர் கால்வாய்கள் அமைப்பதன் மூலம் திறம்பட கடைபிடிக்க வேண்டும்.

**பொருள் 9: ஜல் ஜீவன் திட்டம்**

"ஜல்ஜீவன் மிஷன் திட்டத்தின் கீழ் ஊராட்சியிலுள்ள அனைத்து வீடுகளுக்கும் வீட்டுக் குடிநீர் இணைப்பு வழங்கியுள்ள ஊராட்சிகளுக்கு 100 சதவீதம் அனைத்து வீடுகளுக்கும் குடிநீர் இணைப்பு வழங்கப்பட்ட ஊராட்சி" என கிராம சபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும்.

..............................கிராம ஊராட்சியில் 100 சதவீதம் குடிநீர் இணைப்பு வழங்கப்பட்டுள்ளது. எனவே, ..............................கிராம ஊராட்சியின் " 100 சதவீதம் அனைத்து வீடுகளுக்கும் குடிநீர் இணைப்பு வழங்கப்பட்ட ஊராட்சி" என அறிவித்து தீர்மானம் இயற்றலாம்.

**பொருள் 10: வேளாண்மை – உழவர் நலத்துறை**

I. வேளாண்மை – உழவர் நலத் துறையின் கட்டுப்பாட்டிலுள்ள அனைத்து திட்டங்கள் தொடர்பான விவரங்கள் கிராம சபைக் கூட்டங்களில் பங்கேற்கும் கிராம பொதுமக்கள் மற்றும் விவசாயிகள் உள்ளிட்ட அனைத்து திட்டப் பயனாளிகளும் தெரிந்து கொள்ளும் வகையில் வேளாண் அலுவலர்கள் எடுத்துரைப்பார்கள்.

II. வேளாண்மை – உழவர் நலத் துறையின் மூலம் செயல்படுத்தப்படும் அனைத்து திட்டங்களின் கீழான பயனாளிகளின் பட்டியல்களை தயார் செய்திட வேண்டும்.

| **திட்டத்தின் பெயர்** | **தேர்வு செய்யப்படும் பயனாளிகள் பெயர்** |
|---|---|
| | |
| | |

**பொருள் 11: நமக்கு நாமே திட்டம்**

மக்களின் பங்களிப்புடன் பொது சொத்துக்களை உருவாக்கிடும் வகையில் நமக்கு நாமே திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

பணிகளை தேர்வு செய்து மதிப்பீட்டுத் தொகையில் மூன்றில் ஒரு பகுதியை வழங்கலாம். மதிப்பீட்டுத் தொகையில் 50 விழுக்காடு அல்லது அதற்கு அதிகமான பங்களிப்புத் தொகை வழங்கினால் ஒப்பந்தப்புள்ளியின்றி பங்களித்தவரையோ அல்லது அவரது முகவரையோ பணி மேற்கொள்ள அனுமதி வழங்கப்படும்.

**பட்டியல் இனத்தவர்/பழங்குடியினர் குடியிருப்புப் பகுதிகளில்** பணிகள் மேற்கொள்ள குறைந்தபட்ச பொது மக்கள் பங்களிப்புத் தொகை மதிப்பீட்டுத் தொகையில் **ஐந்தில் ஒரு பங்கு இருத்தல் போதுமானது.** எனவே, இதற்கான பணிகளை கிராமசபையின் மூலம் தேர்வு செய்திட இயலும். தேவையான பணிகளை இங்கு குறிப்பிடலாம்.

**பொருள் 12: மகளிர் திட்டம்**

**12.a. இலக்கு மக்கள் பட்டியல் தயார் செய்தல்**

மக்கள் நிலை ஆய்வின் மூலம் கண்டறியப்பட்ட இலக்கு மக்கள் பட்டியலில் உள்ள ஏழை, மிகவும் ஏழை மற்றும் நலிவுற்றோர்களை சேர்த்தல் மற்றும் நீக்குதல் வேண்டும்.

2012–13 ஆம் ஆண்டில் மக்கள் நிலை ஆய்வு நடத்தப்பட்டு அதில் ஏழை, மிகவும் ஏழை மக்கள் நலிவுற்றோர், மாற்றுத்திறனாளிகள் கண்டறியப்பட்டனர். அதனை மறு ஆய்வு செய்து புதிய சேர்க்கைகள் மற்றும் நீக்குதல் ஏதும் இருப்பின் அவற்றை உறுதி செய்யும் நடவடிக்கையாக, ஏற்கனவே தயாரிக்கப்பட்ட பட்டியலை கிராம சபாவில் வைக்கவும், மேற்படி பட்டியலில் நீக்கம் மற்றும் புதிதாக சேர்க்கப்பட வேண்டிய ஏழை நபர்களின் பட்டியலினை தயார் செய்து ஊராட்சியில் உள்ள முக்கியமான இடங்களில் பார்வைக்கு வைத்து அதில் வரப்பெறும் ஆட்சேபனைகள் மற்றும் புதிய சேர்க்கை கோரிய விண்ணப்பங்களை தல ஆய்வு செய்து உறுதிப்படுத்தப்பட்ட இறுதி பட்டியலினை 15.08.2022 ல் நடைபெறும் கிராம சபாவில் வைத்து ஒப்புதல் பெற்று அங்கிகரிக்கப்பட வேண்டும்.

**12. b. 2021–22 ஆம் ஆண்டுக்கான தமிழ்நாடு ஊரக வாழ்வாதார இயக்கத்தின் பயனாளிகள் விவரம்**

தமிழ்நாடு ஊரக வாழ்வாதார இயக்கத்தின் மூலம் பயன்பெறும் குழுக்கள் மற்றும் பயனாளிகள் விவரம்

| வ.எண். | திட்டங்கள் | குழு / பயனாளியின் பெயர் | தொகை (ரூ.) |
|---|---|---|---|
| | | | |
| | | | |

**12. b. 2022–23 ஆம் ஆண்டுக்கான தமிழ்நாடு ஊரக வாழ்வாதார இயக்கத்தின் பயனாளிகள் விவரம்**

தமிழ்நாடு ஊரக வாழ்வாதார இயக்கத்தின் மூலம் பயன்பெறும் குழுக்கள் மற்றும் பயனாளிகள் விவரம்

| வ.எண். | திட்டங்கள் | குழு / பயனாளியின் பெயர் | தொகை (ரூ.) |
|---|---|---|---|
| | | | |
| | | | |

**12.d. 2022–23 ஆம் ஆண்டுக்கான தீன்தயாள் உபாத்யாய கிராமப்புற திறன்பயிற்சி**

தமிழ்நாடு மாநில ஊரக வாழ்வாதார இயக்கத்தின் மூலமாக செயல்படுத்தப்படும் தீன்தயாள் உபாத்யாய கிராமப்புற திறன்பயிற்சி திட்டத்தின் கீழ் தகுதி பெற்ற இளைஞர்களுக்கு (18 முதல் 35 வயதுடையவர்கள்) வேலைவாய்ப்புடன் கூடிய திறன் மேம்பாட்டு பயிற்சிக்கு விருப்பம் உள்ள இளைஞர்களிடமிருந்து விண்ணப்பம் பெற வேண்டும்.

**பொருள் 13: குழந்தைகள் அவசர உதவி எண் (Child Help Line)**

தமிழ்நாடு குழந்தை உரிமைகள் பாதுகாப்பு ஆணையம் வலியுறுத்தியவாறு பத்திற்கும் மேற்பட்ட வீடுகள் உள்ள குடியிருப்பு வளாகங்களில் அனைவருக்கும் தெரியும்படி **குழந்தைகள் அவசர உதவி எண் (Child Help Line) 1098 மற்றும் 14417** என்ற எண்களை பயன்படுத்திட கேட்டுக்கொள்ளப்படுகிறது.

**பொருள் 14 : முதியோர் உதவி எண்**

முதியோர் பராமரிப்பு சேவை வழங்குநர்கள், ஓய்வூதியம், அரசாங்கத் திட்டங்கள், பலன்கள் போன்றவை அழைப்பவரின் தேவைகளின் அடிப்படையில் உரிய தீர்வு அளிக்க மூத்த குடிமக்கள் மற்றும் ஆதரவற்ற முதியோர்களுக்கு உதவி செய்யும் வகையில் அனைவரும் அறிந்து கொள்ள ஏதுவாக **முதியோர் உதவி அழைப்பு எண் '14567'** ஐ பயன்படுத்திட கேட்டுக்கொள்ளப்படுகிறது.

**பொருள் 15: விவசாயிகள் கடன் அட்டை**

விவசாயிகள் கடன் அட்டையின் பயன்கள் அவற்றை பெறும் விதிமுறைகள், அதனைப் பெறத் தகுதிகள் பற்றி விழிப்புணர்வு ஏற்படுத்துதல். மேலும் இந்த கடன் அட்டைகள் கால்நடை வளர்ப்போர், மீனவர் மற்றும் தொடர்புடைய தொழில் புரிவோர் பெறுவது குறித்த வழிமுறைகளையும் பயன்களையும், வேளாண் அலுவலர் எடுத்துரைப்பார்கள்.

மேற்கண்ட விவரங்கள் கிராம சபையின் ஒப்புதலுக்கு வைக்கப்படுகிறது.

27/04/22

இயக்குநர்

## அதிகாரி குடுமி உங்கள் கையில்

# கிராம சபை வழிகாட்டி



பத்து ரூபாய் இயக்கம்

www.tenrupeerti.com
tenrupeerti@gmail.com

89400 06645
94456 75801

சாமானியனுக்கான நீதி

தகவல் உரிமை சட்ட ஆர்வலர்கள் அமைப்பு

89400 06645, 9445675801

தலைமை அலுவலகம்: எண்–7, பழைய பேருந்து நிலையம், இராசிபுரம், நாமக்கல்–637408